இதழ் 15 மலர் 224

NAVAMANI (Tamil Daily) MADRAS

Regd M No. 7897

4 பக்கம் 25 காசு

Phone No. 76190; 76199

# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 28—4—75 திங்கள் வெளியூர் 29—4—75 செவ்வாய்

"நவமணி"

சந்தா விகிதம்

1—9—74 முதல்
தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் ஏஜண்டு மூலம் | தபால் மூலம் |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 7-50 | ரூ. 8-00 |
| 3 மாதம் | ரூ. 22-50 | ரூ. 24-00 |
| 6 மாதம் | ரூ. 45-00 | ரூ. 48-00 |
| 1 வருடம் | ரூ. 90-00 | ரூ. 96-00 |

போராட்டம் வரும்: புதுவை சுப்பையா எச்சரிக்கை

4-ம் பக்கம்

# எம். ஜி. ஆர். மீது போலீசில் புகார்

## புரட்சி அ. தி. மு. க. செயலாளர் அளித்தார்

சென்னை, ஏப். 28—புரட்சி அ. தி. மு. க. செயலாளர் பொற்செல்வி இன்று சென்னை ராயப்பேட்டை போலீஸ் நிலையத்தில் எம். ஜி. ஆர். மீது ஒரு புகார் கொடுத்தார்.

"என் உயிருக்கும் உடைமைக்கும் ஆபத்துஏற்பட்டுள்ளது. இதற்கு எம். ஜி. ஆர். தான் பொறுப்பு" என்று அப்புகாரில் பொற்செல்வி கூறியுள்ளார்.

"எம். ஜி. ஆரின் உத்தரவின் பேரில் அவருடைய ஆட்கள் என்னையும் என் தொண்டர்களையும் தாக்க ஆரம்பித்துள்ளனர்" என்றும் அவர் தமது புகாரில் கூறியுள்ளார்.

புரட்சிஅ. தி. மு. க. பொதுச் செயலாளரான பொற்செல்வி தமது புகாரில் கூறியுள்ளதாவது:—

எம். எல். ஏ. பதவியை எம். ஜி. ஆர். ராஜிநாமா செய்ய வேண்டும் என்று கோருவதற்காக அவருடைய அலுவலகம் முன்பாக ஆர்ப்பாட்டம்செய்வதற்காக ஊர்வலம் ஒன்றை நடத்த இருந்தோம்.

### தாக்குதல்

எங்கள் ஊர்வலத்தில் கலந்து கொள்வதாக இருந்த தொண்டர்களை அ. தி. மு. க. வைச்சேர்ந்தவர்கள் பயங்கரமாகத் தாக்கி ஊர்வலத்தில் அவர்கள்கலந்து கொள்ளாதபடி செய்தனர்.

இதன்காரணமாக ஊர்வலம தடைப்பட்டது.

### கொலை மிரட்டல்

அரசியல்என் பெயரைக் கெடுக்க எம. ஜி. ஆர், என்ன வெல்லாமோ செய்து வருகிறார்.

எம் எல். ஏ. பதவியை அவர் ராஜிநாமா செய்ய வேண்டும் என்று கோரி ஊர்வலமும் ஆர்பாட்டமும் நடத்த இருந்தோம,

இதை அறிந்த பிறகு எனக்கும் என் தொண்டர்களுக்கும் பல கொலை மிரட்டல்கள் வந்தன. போன் மூலமாக பல கொலை மிரட்டல்கள்வந்தன. ஊர்வலமும் ஆர்பாட்டமும் நடக்க இருப்பதைக் கண்டு பயந்து எம். ஜி. ஆரின் உத்தரவின் போல் அவருடைய ஆட்கள் என்னையும் என் தொண்டர்களையும் தாக்க ஆரம்பித்துள்ளனர்.

### உயிருக்கு ஆபத்து

என் உயிருக்கும்உடைமைக்கும் பாதுகாப்புஇல்லை இதற்கு எம்ஜிஆர் தான்முழு பொறுப்பு எனவே எனக்கும், வீட்டிற்கும, என் குழந்தைகளுக்கும் தொண்டர்களுக்கும் தக்க பாதுகாப்பு அளிக்க வேண்டுமென கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு பொற்செல்வி தமது புகாரில் கூறியுள்ளார்.

## பழைய கஞ்சி குடித்த 7 பேருக்கு மயக்கம்

சென்னை, ஏப். 28—பழைய கஞ்சி சாப்பிட்ட ஒரே குடும்பத்தைச் சேர்ந்த 7 பேர் வாந்தி, மயக்கம் ஏற்பட்டதால் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டனர்.

சென்னை, குலாம் அப்பாஸ அலிகான் தெருவில் காதர் அலி மரைக்கார் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் நேற்று மதியம் பழைய கஞ்சி சாப்பிட்டனர். இதன் பின் இவர்களுக்கு வாந்தியும், மயக்கமும் ஏற்பட்டதால் ராயப்பேட்டை மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டனர்.

இப்போது இவர்கள் உடல் நிலை தேறிவருகிறது.

## பெண்களை துகிலுரிந்த பூசாரிகள்

கோலாப்பூர், ஏப். 28—பூசாரிகளால் துகிலுரியப்பட்டு தாக்கப்பட்ட 4 பெண்களில் இருவர் ஆஸ்பத்திரியில் அனு மதிக்கப்பட்டிருப்பதாக போலீசார் தெரிவித்தனர்.

(4ம் பத்தி தொடர்ச்சி)

ஏற்பட்டது. குளம், ஏரி முதலியவைகளைத் தூர் வாரினோம். இதனால் மழை பெய்தது தண்ணீர் கொள்ளளவு அதிகமாகியது. உற்பத்திபெருகியது.

1971-ல் ஆட்சிக்கு வந்தோம் 75ல் வறட்சி ஏற்பட்டிருக்கிறது,

ஏரி, குளங்களை ஆழப்படுத்துகிறோம், மழை பெய்யும். தண்ணீர் அதிகமாகத் தேங்கிஇருக்கும். உற்பத்தி பெருகும். 76ல் நாம் மீண்டும் ஆட்சிக்கு வருவோம்.

துன்பம் என்றும் நிலைத்திராது, துன்பத்திற்குப் பிறகு இன்பம் வரும்.

## 76-ல் மீண்டும் ஆட்சிக்கு வருவோம்: கருணாநிதி பேச்சு

சென்னை, ஏப். 28—சென்னைக்கு விரைவில் பாலாற்று நீர் கொண்டுவரப்படும்என்று முதலமைச்சர் கருணாநிதி இன்று அறிவித்தார்.

சென்னை வடபழனி ஆண்டவர் கோவில் குளத்தில் தூர் எடுக்கும் விழாவை முதலமைச்சர் கருணாநிதி இன்று காலை துவக்கி வைத்தார்.

அமைச்சர் கண்ணப்பன் தலைமை வகித்தார்.

அமைச்சர் அன்பில் தர்மலிங்கம், முரசொலி மாறன், எம். பி. சென்னை மாவட்ட தி. மு. க. செயலாளர் ஆர். டி. சீதாபதி ஆகியோர் கலந்துகொண்டனர்.

கூட்ட நிகழ்ச்சி முடிவடைந்ததும் முதலமைச்சர் கருணாநிதி திருக்குளத்திற்குள இறங்கிமண்வெட்டி கொண்டு மண்ணைத் தோண்டி தூர் எடுக்கும் பணியைத் தொடங்கி வைத்தார்.

கருணாநிதி பேசுகையில் கூறியதாவது:— வறட்சி நிவாரணப் பணியில் நாம் தீவிரமாக ஈடுபடுகிறோம். சிலர் இந்த நேரத்தில் படப்பிடிப்புக்குப் போய்க்கொண்டிருக்கிறார்கள். சிலர் தேர்தல் நிதி வசூல் செய்துகொண்டு இருக்கிறார்கள். இவர்களை மக்கள் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள்,

1969-ல் வறட்சி

(2ம் பத்தி பார்க்க)

## கருணாநிதி வீட்டு அருகே 4 பேர் கைது

சென்னை, ஏப். 28—முதலமைச்சர் கருணாநிதி வீட்டின் முன் உண்ணாவிரதம் இருக்கச் சென்ற 4 பேர் இன்று கைதானார்கள்.

கோபால், நடேசன், குமார், துரைசாமி ஆச்சாரி என்ற இவர்கள் நால்வரும் கறுப்புப்பண லஞ்ச ஒழிப்புச் சங்கத்தைச் சேர்ந்தவர்கள்

போலீஸ் அதிகாரி ஒருவர் நேர்மையற்ற போக்கை கடைப்பிடிப்பதாக அவர்கள் கூறி அவர்மீது நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று கோரும் பொருட்டு முதல்வர் கருணாநிதி வீட்டு முன்பாக உண்ணாவிரதம் இருப்பதற்காகச் சென்றுகொண்டிருந்தனர்.

அண்ணா சிலைக்கு மாலை அணிவித்து விட்டு அவர்கள் ஊர்வலமாக லாயிட்ஸ் சாலை அருகில் வந்தபோது 4 பேரும் கைது செய்யப்பட்டனர்.

## புது காங்கிரசார் 600 பேர் கைது

கான்பூர், ஏப். 28—ஜெயப்பிரகாஷிடம் மகஜர் கொடுக்கச்சென்ற புது காங்கிரசார் 600 பேர் நேற்று கைது செய்யப்பட்டனர்.

தடையை மீறி ஊர்வலமாகச் சென்றதற்காக இவர்கள் கைது செய்யப்பட்டனர். கைது செய்யப்பட்டவர்களில் எம். எல். ஏ. ஒருவரும் இருக்கிறார்,

# குஜராத் தேர்தலில் மாநில சுயாட்சி கோரிக்கை

ஆமதாபாத், ஏப். 28—குஜராத் தேர்தலில் மாநிலசுயாட்சி கோரிக்கையும் இடம் பெறுகிறது. குஜராத் முன்னாள் முதல்வர் சிமன்பாய் படேலின் கிசான் மஜ்தூர் மக்கள் கட்சி இக் கோரிக்கையை எழுப்பியுள்ளது.

சிமன்பாய் படேல் நேற்று தமது கட்சியின் தேர்தல் அறிக்கையை வெளியிட்டார்.

அந்த அறிக்கையில் இக் கோரிக்கை காணப்படுகிறது.

குஜராத் தேர்தல் சம்பந்தமாக தேர்தல் அறிக்கை வெளியிடும் கட்சிகளில் இதுவே முதலாவதாகும்.

இத்தேர்தலில் அடுத்தமாக ஆரம்பத்தில் வேட்பு மனுக்கள் தாக்கல் செய்யப்பட இருக்கின்றன.

### அதிக அதிகாரம்

குஜராத்தை விரைவில் அபிவிருத்தி செய்யவும் சுரண்டல் அற்ற சமுதாயத்தை ஏற்படுத்தவும், மாநில அரசுக்கு வரி விதிப்பு, நிதி விஷயங்களில்அதிக அதிகாரங்களை அளிக்க வேண்டும் என்று சிமன்பாய் படேல் வெளியிட்ட தேர்தல் அறிக்கையில் வற்புறுத்தப்பட்டுள்ளது.

மாநிலங்கள் விரைவாக தொழில் அபிவிருத்திஅடைய அவற்றுக்குலைசென்ஸ்கொடுக்கும் அதிகாரங்கள் ஓரளவுக்கேனும் இருக்கவேண்டும்என்றும்அத்தேர்தல்அறிக்கைகூறுகிறது.

தாங்கள் ஆட்சிக்கு வந்தால் லெவி முறையை அடியோடு ஒழித்து வெளி மார்க்கெட்டில் தானியங்களை வாங்கி ஏழை மக்களுக்கு குறைந்த விலையில் விற்போம் என்றும் அக்கட்சி தனது தேர்தல் அறிக்கையில் கூறியுள்ளது.

நிலமற்ற விவசாயிகள், அரிஜனங்கள், ஆதிவாசிகள் மற்றும் பின்தங்கிய மக்கள் ஆகியோரின் முன்னேற்றத்துக்காகப் பாடுபடுவோம் என்றும் சிமன்பாய் படேல் கூறினர்.

நிருபர்களிடம் சிமன்பாய் படேல் பேசுகையில்கம்யூனிஸ்டல்லாத எதிர்க்கட்சிகளின் கூட்டணி அல்லது புது காங்கிரஸ் ஆகிய எந்த அணியுடனும் சேராமல் தம் கட்சி தனித்துப்போட்டியிடும் என்றும் சிமன் பாய் படேல் கூறினர்.

தங்கள் கட்சி 150 இடங்களில் போட்டியிடும் என்றும் வேட்பாளர் பட்டியல் மே 1-ந் தேதி வாக்கில் வெளியிடப்படும் என்றும் அவர் சொன்னர்.

# குடிநீர்ப் பிரச்னை: பீதி வேண்டாம்; கருணாநிதி அறிவிப்பு

சென்னை, ஏப். 28—சென்னை நகரத்தில் தண்ணீர் பஞ்சம் சம்பந்தமாக மக்கள் பீதியடையத் தேவையில்லை என்று முதலமைச்சர் கருணாநிதி இன்று கூறினர்.

உள்ளாட்சித்துறை அமைச்சர் மன்னை நாராயணசாமி, தலைமைச் செயலாளர் சபாநாயகம், மாநகராட்சி தனி அதிகாரி அந்தோணி கமிஷனர்கள் ஆகியோருடன் கருணாநிதி இன்று அவசர ஆலோசனை நடத்தினர்.

இது சம்பந்தமாக நிருபர்களிடம் கருணாநிதி கூறியதாவது:—

சென்னை நகருக்கு தினமும் 530 லட்சம் காலன் தண்ணீர் சப்ளை செய்யப்பட்டு வந்தது. இப்போது 200 லட்சம்காலன் தண்ணீர்தான் சப்ளைசெய்யப்படுகிறது. 1000தொட்டிகளை அமைத்து துளைக்கிணறுகளிலிருந்து தண்ணீர் எடுக்க நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

4 ஆயிரம் துளைக்கிணறுகள் ஏற்கனவே அமைக்கப்பட்டிருக்கின்றன. ஜூன் இறுதிக்குள் மேலும் 6 ஆயிரம் துளைக் கிணறுகள்ஏற்படுத்தப் படும்.

துளைக் கிணறுகளிலிருந்து தண்ணீரை எடுத்துச் செல்ல 50 லாரிகள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன.

மே இறுதிகுள் லாரிகளின் எண்ணிக்கை 100 ஆக உயரும.

### திறந்த வெளி கிணறுகள்

திறந்த வெளிக் கிணறுகள் 700 அமைக்கப்படும். இந்தக் கிணறுகளுக்குப் பக்கத்தில் கைப்பம்புகளும் பொருத்தப் படும்.

உரத் தொழிற்சாலை, எண்ணெய் சுத்திகரிப்பு ஆலைகள் சுத்தம் செய்வதற்காகஆண்டு தோறும் லே-ஆப் விடுவது வழக்கம் இந்த ஆண்டு லே-ஆப்பை முன்னதாகவே விடும்படி கேட்டிருக்கிறோம். இதன் மூலம் இவைகள் பயன்படுத்தும் 30 லட்சம் காலன் தண்ணீர் சென்னை மக்களுக்கு மிச்சப்படும்,

புழலேரியிலிருந்து தண்ணீர் கொண்டுவரும் ஓடையில் தண்ணீர் உறிஞ்சுவதை தடுக்க கான்கிரீட் லைனிங் போடப்படும். இந்த வேலை ஜூன் மாதத்துக்குள் முடிந்து விடும்.

### முத்துக்காட்டில் இருந்து தண்ணீர்

திருவான்மியூர் பகுதி முத்துக் காட்டிலிருந்து தண்ணீர் கொண்டுவர தீவிர முயறசி எடுக்கப்பட்டு வருகிறது, மே மாதத்துக்குள் இந்த வேலையை முடிக்கவேண்டும் என்று குடிநீர் வாரியத்துக்கு உத்தரவிடப்பட்டுள்ளது.

முத்துக் காட்டிலிருந்து தினமும் 10 லட்சம் முதல் 20 லட்சம் காலன் வரை தண்ணீர் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது,

### பீதி வேண்டாம்

முத்துக்காடு தண்ணீரும், மணலி ஆலைகளிலிருந்து மிச்சப்படும் தண்ணீரும் தண்ணீர்ப் பஞ்சத்தைப் போக்க உதவும்.

தண்ணீர்ப் பஞ்சத்தினால் மக்கள் பீதியடையத் தேவையில்லை.

மக்கள் படும் அவதியைப் போக்க அரசாங்கமும், மாநகராட்சியும் எல்லாவிதமான தீவிர நடவடிக்கைகளையும் எடுத்து வருகிறது. ஆகையால் பீதியடையத் தேவையில்லை.

இவ்வாறு கருணாநிதி கூறினார்.

சென்னைக்கு பாலாற்று நீர் கொண்டுவரும் வேலை செப்டம்பரில் முடிவடையும் என்றும் கருணாநிதி கூறினர்.

துளைக்கிணறுகள் அமைக்கும்இடங்களை நாளை பார்வையிடப்போவதாகவும் கருணாநிதி அறிவித்தார்.

நெய்வேலியிலிருந்து தண்ணீர் கொண்டு வருவதில் அதிக செலவும் கஷ்டமும் இருப்பதாகவும், ஆந்திர தண்ணீரும் உடனடியாகக் கிடைக்காது என்றும் கருணாநிதி தெரிவித்தார்.

# கண்ணில் மிளகாய் பொடி தூவி திருட்டு: சென்னையில் 2பேர்கைது

சென்னை, ஏப், 28—வீதியில் செல்வோரின் கண்களில் மிளகாய்ப் பொடியைத் தூவி நூதனமான முறையில் திருடியதாக சென்னையில் 2 பேரை போலீசார் கைது செய்துள்ளனர்.

இவர்களில் ஒருவர் பெயர் கிட்டு. (வயது 20), இன்னொருவர் பிரகாசம் (வயது 20) இருவரும் மயிலை, அப்பர்சாமி கோவிலைச் சேர்ந்தவர்கள்.

அபிராமபுரத்தில் தெருவில் சென்றுகொண்டிருந்த வக்கீல் ஒருவர்முகத்தில்அவர்கள் இருவரும் திடீரென்று மிளகாய்ப் பொடியைத் தூவிவிட்டு அவரிடமிருந்து ரூ. 330-ஐயும் திருடிச் சென்றனர் என்று கூறப்படுகிறது.

கடையை பூட்டிக்கொண்டு வீதியில் சென்ற வியாபாரி ஒருவர் முகத்தில இதேபோல் மிளகாயப் பொடியைத் தூவி 200 ரூபாயைப் பறித்துச் சென்றனர் என்றும் கூறப்படுகிறது.

அது மட்டுமின்றி பல வீடுகளில் புகுந்து பாய்லர்கள், பித்தளை சாமான்கள் கார் பாட்டரிகள் ஆகியவற்றை அவர்கள் திருடியுள்ளனராம

இவர்கள் இதுவரை 16 இடங்களில் திருடியுள்ளனர் என்று கூறப்படுகிறது,

இவர்கள் மயிலை ஆஞ்சநேயர் கோயிலைச் சேர்ந்த பிள்ளையார் கோயிலில்பூட்டை உடைத்து பித்தளைக் கிரீடம், மணி மற்றும் பூசை சாமான்களைத் திருடியுள்ளதாகவும் கூறப்படுகிறது.

இந்த இருவரையும் மயிலை குற்றவியல் போலீசார் இன்று கைது செய்தனர். இவர்களிடமிருந்து ரூ. 5 ஆயிரம் மதிப்புள்ள பொருள்கள் மீட்கப்பட்டன.

போலீசார் மேலும் விசாரணை செய்து வருகின்றனர்.

## சக்தி சேனை கோரிக்கை வெற்றி

சென்னை, ஏப். 28—எண்பது சதவிகித வேலைகளை தமிழர்களுக்கு தரவேண்டும் என்ற சக்திசேனையின் கோரிக்கையை ஒரு நிறுவனம் ஏற்றுக்கொண்டதாக சக்திசேனை அறிவித்துள்ளது.

இதற்காக சக்தி சேனையினர் இன்று அந்த நிறுவனம் முன்பு ஆர்ப்பாட்டம் செய்ய திட்டமிட்டு இருந்தனர்.

இதையொட்டி நேப்பியர் பூங்காவில் இருந்து ஊர்வலம் புறப்படத் தயாராக இருந்தது.

உங்கள் கோரிக்கையை ஏற்கிறோம் என்று அந்த நிறுவனம் தகவல் அனுப்பியதன் பேரில் ஊர்வலம பிறகு கலைந்துவிட்டதாக சக்தி சேனைத்தலைவர் பி. எம். ராஜவேலு ராஜாஜியின் பேரன் சி. வி. விட்டல்ஆகியோர் அறிவித்தனர்.

கோரிக்கையை அந்த நிறுவனம் ஏற்றுக் கொண்டதால் இன்று நடக்க இருந்த ஊர்வலம நடக்காமல் கலைக்கப்பட்டது என்று அவர்கள் அறிவித்து இருக்கிறார்கள்.

# என். ஜி. ஓ.க்கள் நடத்திய "பிச்சை எடுக்கும்" போராட்டம்

புனா, ஏப். 28—மகாராஷ்டிர மாநிலத்தில் கடந்த சில நாட்களாக வேலை நிறுத்தம் செய்துவரும் என். ஜி. ஓ. க்கள் நேற்று புனா நகரில் தெருக்களின் வழியே ஊர்வலமாகச் சென்று "பிச்சை எடுக்கும்," போராட்டம் நடத்தினர்.

"மத்திய அரசு ஊழியருக்கு ஈடாக மாநில அரசு ஊழியருக்கு பஞ்சப்படி கொடுக்க பணம் இல்லை என்று மகாராஷ்டிர அரசு கூறுவதை கிண்டல் செய்யும் வகையில் அவர்கள் இந்த நூதன போராட்டத்தைநடத்தினர்.

சுமார் 200 என். ஜி. ஓ.க்கள் இந்த ஊர்வலத்தில் கலந்துகொண்டு தெருவில் செல்வோரிடம் "பிச்சை" எடுத்தனர். அவர்கள் ஒருவரிடமிருந்து அதிக பட்சமாக 10 பைசாவுக்கு மேல் வாங்கவில்லை.

எனினும் வழியில் ஓரிடத்தில் ஒரு பிச்சைக்காரர் நாள் பூராவும் பிச்சை எடுத்ததன் மூலம் தனக்கு கிடைத்த75 பைசாவையும் என். ஜி. ஓக்களுக்கு அளித்தார், அவர் வற்புறுத்தியதால் அத்தொகை ஏற்றுக கொள்ளப்பட்டது என்று பின்னர் என். ஜி. ஓ. போராட்டத் தலைவர்ஜோஷி கூறினர், இன்னொர் இடத்தில் 10 வயதுச் சிறுவன் 10பைசா பிச்சை போட்டதாகவும் அவர் கூறினர்.

என். ஜி. ஓக்கள் எடுத்த பிச்சையில் மொத்தம் 305 ரூபாயும் 51 பைசா வசூலாகியது.

இத்தொகையை அரசாங்கத்திடம் ஒப்படைக்குமாறு நகர மேயர் வைத்தியாவிடம் கொடுக்கப்போவதாக அவர் தெரிவித்தார். அரசாங்கம் ஏற்க மறுத்தால் இத் தொகையைசேரி ஒழிப்பு நிதிக்கு வழங்கப் போவதாகவும் அவர் கூறினர்.

என். ஜி. ஓ. க்கள் ஏந்திச் சென்ற பிச்சை பாத்திரங்கள் ஒன்றில் ஒரு துண்டுச்சீட்டு கிடந்தது. என். ஜி ஓக்களை பிச்சை எடுக்க வைத்த அரசு பதவியில் நீடிக்க கூடாது என்று அதில் எழுதப்பட்டிருந்தது.

## சென்னை மார்க்கெட்

சென்னை, ஏப். 28—

**தங்கம்**

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 581 00
(22 காரட்) சில்லரை கிராம் ரூ. 55 00

**வெள்ளி**

பார்வெள்ளி (1 கி. கி.) ரூ. 1085 00
உள்ளூர் 1040 00
(வெள்ளி 10 கிராம்) ரூ. 10 95

**மணிலாப்பயறு**

கோடைகால பட்டாணி மொத்த விலை 277 00

**மணிலா எண்ணெய்**

மொத்த விலை ரூ. 770 00
சில்லரை விலை ரூ. 8 50

**விளக்கெண்ணெய்**

(100 கி. கி.) சென்னை கிடங்குடெலிவரிதிருப்பத்தூர் மொத்த விலை ரூ. 460 00
சேலம் தாமரை அன்னம் மார்க் (16 05 கி. கி.) ரூ. 82 00

**தேங்காய் எண்ணெய்**

(16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் ரூ. 164 00

**நல்லெண்ணெய்**

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 154 00
விற்பனை வரி தனி
சில்லரை கிலோ 1-க்கு ரூ. 9 70

**கடலைப்பிண்ணாக்கு**

70கி.கி.கொண்டமூட்டைக்கு எக்ஸ்பெல்லர் ரூ. 70 00

**சர்க்கரை**

பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. ரூ. 465 00
முதல் ரூ. 467 00

## ஆஸ்பத்திரியில் மணலி கந்தசாமி

சென்னை, ஏப். 28—தமிழ் நாடு கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் மணலி கந்தசாமிக்கு ரத்தக்கொதிப்பு ஏற்பட்டு இருக்கிறது.

மணலி கந்தசாமி நேற்று கீழ்ப்பாக்கம் மருத்துவக் கல்லூரி மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டு இருக்கிறார்.

மணலி கந்தசாமிக்கு ஏற்கனவே உடல் நலம் சரியில்லாமல் இருந்தது.

அண்ணா நகரில் உள்ள இந்த மருத்துவநிலையத்தில் சிகிச்சை பெற்றுவந்தார்.

திடீர் என்று நேற்று அவருக்கு ரத்தக் கொதிப்பு ஏற்பட்ட தால் கீழ்ப்பாக்கம் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டார்.

### இந்திராவுக்கு கறுப்புக்கொடி காட்டாமல் தடுத்த

# எனக்கா புதுகாங்கிரஸ் கறுப்புக்கொடி காட்டுவது? கருணாநிதி கேள்வி

**சென்னை, ஏப். 28—இந்திராவுக்குக் கறுப்புக்கொடி காட்டாமல் தடுத்த எனக்கு புதுகாங்கிரஸ்காரர்கள் கறுப்புக்கொடி காட்டுகிறார்களே என்று கருணாநிதி கூறினார்.**

**தமது சூசகமான இந்தப் பேச்சின் பொருளை இந்திரா சூசகமாக புரிந்துகொள்ள வேண்டுமென்றும் கருணாநிதி பேசினார்.**

மதுராந்தகத்தில் நேற்று அண்ணாவின் சிலையை கருணாநிதி திறந்து வைத்தார்.

அப்போது கருணாநிதிக்கு புதுகாங்கிரஸ்காரர்கள் கருப்புக்கொடி காட்டினார்கள்.

இந்த நிகழ்ச்சியைக் குறிப்பிட்டு கருணாநிதி பேசியதாவது:—

தி. மு. கழகத்தில் துரோகிகள் முளைத்துவிட்டார்களே என்பதற்காக தலைகுனிந்த அண்ணனே, உன்னைத் தலை நிமிர வைக்கத்தான் — உன் லட்சியங்களைக் கம்பீரமாக நடைபோடச் செய்யத்தான் இன்றைக்கு தி.மு. கழகப் பட்டாளம் அணி வகுத்திருக்கிறது.

தி. மு. கழகத்தின் சார்பில் உனக்கு சிலை திறக்கிற நேரத்தில் உன் சிலை திறக்கக்கூடாது என்று கறுப்புக்கொடி காட்டுகின்ற கயவர்கள் உன் பெயரைத் தன் கட்சிக்கு வைத்துக் கொண்டு நாட்டில் உலவுகிறார்கள்.

### சூசக பேச்சு

மத்திய சர்க்கார் ஒற்றர் இருந்தால் அவர் மூலமாக இந்திரா காந்திக்கு தெரிவிக்க விரும்புகிறேன்.

அம்மையார் அவர்களே, நீங்கள் தமிழ்நாட்டிற்கு வருகிற நேரத்தில் ஒரு கறுப்புக் கொடி கூட உங்கள் முன்னால் பறக்கவிடக் கூடாது, அமளி கூடாது என்பதற்காக நடவடிக்கை எடுக்கிற தி. மு. கழக அரசின் தலைவன் கருணாநிதி, தமிழகத்தின் முதலமைச்சர் அவரை ஆளாக்கி விட்ட அண்ணனுடைய சிலையை மதுராந்தகத்தில் திறக்க வருகிற நேரத்தில், உங்களுடைய கட்சியைச் சேர்ந்த புது காங்கிரஸ்காரர்கள் கறுப்புகொடி காட்டுகிறார்கள்!

இந்திரா காந்தி அம்மையாருக்கு மத்ய அரசின் போலீசார் இந்தத் தகவலைக்குறித்து அனுப்பட்டும். அவ்வளவுதான் சூசகமாக என்னால் சொல்ல முடியும் என்பதை மாத்திரம் தெரிவித்துக் கொள்கிறேன் என்று கருணாநிதி பேசினார்.

### கை தட்டுவது எப்போது?

1976 தேர்தலில் தி. மு. கழகமே வெற்றி பெறும் என்பதைக் கூறி ஒரு உதாரணத்தையும் கருணாநிதி தெரிவித்தார்.

அவர் கூறியதாவது:—

1970ம் ஆண்டு தமிழ்நாட்டிலிருந்து பெரியசாமி என்ற கரக ஆட்டக்காரர் அமெரிக்காவுக்கு கரகம் ஆடச் சென்றாராம். அவருடைய கரக ஆட்டத்தில் பிரதான ஆட்டம் ஒருவனை கீழே படுக்க வைத்துவிட்டு அவன் நெஞ்சில் ஒரு வாழைக்காயை வைத்து கரகக்காரர் கண்ணை கட்டிக் கொண்டு பட்டாக் கத்தியால் அந்த வாழைக் காயை வெட்டுவாராம்.

அப்படி அவர் வெட்டப் போகிறபோது அதைப்பார்த் கொண்டிருந்த அமெரிக்கர்கள் அவரை நிறுத்தச்சொல்லிஉன்னுடைய ஆளைப் படுக்கவைக்கக் கூடாது—எங்கள் ஊர்க்காரரே படுக்க வேண்டும் என்று கூறி அவர்களே ஒரு கத்தியையும் காயையும் கொடுத்து வெட்டச் சொன்னார்களாம். அவரும் அதை வெட்டினார். அப்போது யாரும் அதற்காகக் கைதட்டவில்லையாம்.

அதற்குப் பிறகு மற்றொரு கரக ஆட்டத்தை ஆடிக் காட்டினாராம். அப்போதும் கைதட்டவில்லையாம், மேலும் பல சிறப்பான ஆட்டங்களை அவர் ஆடிக் காட்டியபோதும் யாரும் கைதட்டவில்லையாம்.

### வருத்தம்

இப்படி அற்புதமான காரியங்களைச் செய்தும் கைதட்டவில்லையே என்கிற வருத்தத்தோடு அவர் நிகழ்ச்சியை முடித்து முடிவில் 'வணக்கம்' என்று சொன்னாராம் உடனே ஏழு நிமிட நேரம் கரக ஆட்டம் பார்த்த அத்தனை பேரும் கைதட்டினார்களாம் இதென்ன விந்தை, ஒவ்வொரு சாதனை செய்த போதும் யாரும் கைதட்டவில்லை இப்போது கைதட்டுகிறார்களே என்று அவரை கேட்டபோது "இது தான் அமெரிக்கர்கள் பழக்கம். இடையிடையே கை தட்ட மாட்டார்கள். எல்லாவற்றையும் சேர்த்து இறுதியில் பாராட்டி கைதட்டுவார்கள்" என்று சொன்னார்களாம்.

நம்முடைய சாதனைகளைப் பார்த்து இந்த இடைக்காலத்தில் யாரும் கை தட்டி பாராட்டாமல் இருந்திருக்கலாம். ஆனால் 1976ல் கழக அரசின் சாதனைகளுக்கு எல்லாம் சேர்த்து மொத்தமாக கைதட்டிப் பாராட்டத்தான் போகிறார்கள்—தி. மு. கழகத்திற்கு வெற்றிவாய்ப்பை, நாட்டு மக்கள் அளிக்கத்தான் போகிறார்கள்!

### எனக்கு செய்யும் துரோகம்

நாம் எத்தனையோ விளக்கங்கள் சொன்ன பிறகும் அண்ணா மாநில சுயாட்சி கேட்கவில்லையென்று அண்ணாவின் பெயரைவைத்து கட்சி நடத்துபவர்கள் சொல்கிறார்கள் என்றால், அவர்கள் எல்லாம் அண்ணாவை உணர்ந்தவர்கள் அல்ல.

அண்ணாவை உணர்ந்தவர்கள் நாம், அண்ணா உலகத்தைப் படித்தார், நாம அண்ணாவையே படித்தவர்கள், அண்ணாவினுடையகுணாதிசயங்கள், சுபாவங்கள், கட்சி நடத்துவதற்காக எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள், அவர் ஆட்சிப் பொறுப்பில் இருந்தபோது யாருக்காக உழைக்க வேண்டுமென்று சொன்னாரோ அவைகளையெல்லாம் நாங்கள் உணர்ந்திருக்கிறோம்.

ஆகவேதான் நெற்கதிரைப் போல தலையைத்தொங்க விட்டுக்கொண்டு சில வடிவாக உட்கார்ந்து இருக்கிற எங்கள் அண்ணனே, கையிலே புத்தகத்தை வைத்துக் கொண்டு எழுதியதையெல்லாம் திரும்பத் திரும்ப படித்துப் பார்த்து, இவைகளையெல்லாம் என் தம்பிகள் நிறைவேற்றுவார்கள் என்று பார்த்து ஒவ்வொரு பக்கமாக புரட்டிக் கொண்டிருக்கிற எங்களின் அண்ணனே, உன்னைச் சிலர் புரியாமல் உன் பெயரை மட்டும் பயன் பயன்படுத்திக் கொண்டு உனக்கு துரோகம் செய்கிறார்கள்.

மேற்கண்டவாறு கருணாநிதி பேசினார்.

## வெங்கா எம். எல். சி. கைது

செங்கற்பட்டு, ஏப். 28—வயலூருக்கு பாலத்தைத் திறந்து வைக்க வந்த முதலமைச்சர், அமைச்சர்களுக்கு எதிராகக் கறுப்புக்கொடி ஆர்ப்பாட்டம் நடத்தப்படும் என்று எதிர்க் கட்சியினர் மிரட்டல் இருந்ததாகக் கூறப்படுகிறது. இதன் காரணமாக அ.தி.மு.க.வைச் சேர்ந்தவர்களும், காங்கிரஸ்காரர்களும் 45 பேர் கைது செய்யப்பட்டனர். வெங்கா எம். எல். சி. (அ.தி.மு க.), அகில இந்திய புதுகாங்கிரஸ்கமிட்டி அங்கத்தினர் ஹுகும்சந்த் இருவரும் கைது செய்யப்பட்டனர்.

## சென்னை நகருக்கு ஆந்திராவில் இருந்து தண்ணீர் கிடைக்குமா?

**ஹைதராபாத், ஏப். 28—சென்னை நகருக்காக குடிநீர் அளிக்கும்படி கோரி தமிழ் நாட்டிலிருந்து கோரிக்கை எதுவும் வரவில்லை என்று ஆந்திர முதல்வர் வெங்களா ராவ் கூறியுள்ளார்.**

ஆந்திராவிலிருந்து தண்ணீர் பெற முயற்சிப்பதாக தமிழக மேல்சபையில் முதல்வர் கருணாநிதி கூறியுள்ளது பற்றி கேட்டபோது ஆந்திரா முதல்வர் இவ்வாறு கூறினார்.

ஆந்திர அரசாங்கவட்டாரங்களில் கேட்டபோதும் அதிகாரிகள் இவ்விதமே கூறினர்.

தமிழ்நாட்டிலிருந்து கோரிக்கை வந்தால் கூட இணைப்பு கால்வாய் வசதியும் மற்ற வசதிகளும் இல்லாத காரணங்களினால் சென்னை நகருக்கு தண்ணீர் சப்ளைசெய்யும் சாத்தியமில்லை என்று ஆந்திர பிரதம காரியதரிசி பொதுப்பணி இலாகா காரியதரிசி கூறினர்.

சென்னை நகருக்கு சப்ளை செய்யும்படி நெல்லூர் சித்தூரில் நீர்வள வசதியில்லை என்றும் உயர் அதிகார வட்டாரம் கூறிற்று.

### ரூ. 30 கோடி செலவாகும்

சென்னை, நீர் தேக்கம், ஆந்திர நீர்நிலை 'இணைப்பு வசதி'யின்றி எப்படி கிருஷ்ணா தண்ணீரை சென்னைக்குசப்ளை செய்ய முடியும் என்றும் கூறப்படுகிறது.

இப்பிரச்னை தீர ஒரு வழி இருக்கிறது. பெண்ணாற்றில் தண்ணீரைவிட்டு, அங்கிருந்து சுவர்ணமுகிமூலம் அனுப்பலாம். ஆனால்இதற்கு செலவு ரூ. 30 கோடி ஆகும். ஆனால் சென்னை நகருக்கோ உடனடியாக தண்ணீர் தேவைப்படுகிறது.

ஆந்திராவிலிருந்து பக்கிங்ஹாம்கால்வாய்மூலம்தண்ணீர் சப்ளை செய்யலாம் என்று சிலர் கருத்து தெரிவித்தனர். ஆனால் சாக்கடை நீர் செல்லும் பக்கிங்ஹாம் கால்வாய் மூலம் குடிநீர் சப்ளையாவதை சென்னை நகர மக்கள் விரும்ப மாட்டார்கள் என்று சுட்டிக் காட்டப்படுகிறது.

## மதுரையில் ஒரு மணி நேர மழை

மதுரை, ஏப். 28—மதுரை நகரில் நேற்று சுமார் ஒருமணி நேரம் இடி மின்னலுடன் நல்ல மழை பெய்தது.

கடந்த சில நாட்களாக கடும் வெப்பத்தால் அவதிப்பட்டு வந்த மக்களுக்கு இம் மழை சிறிது நிவாரண மளிக்கிறது.

## சென்னையில் நாளைய நிகழ்ச்சிகள்

டாக்டர் மு.வ. உருவப் படத் திறப்பு விழா அமைச்சர் நெடுஞ்செழியன் தலைமையில் முதல்வர் கருணாநிதி திறந்துவைப்பார், ம. பொ. சி., நெ. து. சுந்தர வடிவேலு உரையாற்றுவர். பல்கலைக் கழக பேரவை மண்டபம். மாலை 6-15 மணி.

மக்கள் மறுமலர்ச்சி மன்றம் பொதுக் கூட்டம்: தலைமை: வி.க. சுப்பிரமணி. பேசுவோர்: கோ. முன்னேற்றம், க. சுப்பு, ஆர். டி. சீதாபதி மற்றும்பலர். வியாசர்பாடி முத்து முதலி தெரு, மாலை 6-30 மணி.

பாரதி தமிழ் மன்றம் பாரதிதாசன் பிறந்தநாள் விழா:— கவியரங்கம், பி. சோமசுந்தரம், அழ. வள்ளியப்பா, நாக. முத்தையா, நா. ரா. நாச்சியப்பன்; மனச ப. கீரன், மற்றும் பலர். கருத்தரங்கம்; ந. தர்மலிங்கம், தா. பாண்டியன், தா. மு. சிதம்பர ரகுநாதன், மற்றும பலர் பங்கு ஏற்பர், கலைஞர் கருணாநிதி நகர் மாலை 5 மணி.

சுய சிந்தனையாளர் சங்கம்: பாரதிதாசன் பிறந்த நாள் விழா: பூங்குன்றன் தலைமையில் தமிழன்பன் பேசுவார். மத்திய நூலகக் கட்டிடம், மாலை 6-15 மணி.

அருள் நெறிசபை: சிலம்பொலி செல்லப்பன் 'சுக்ரீவன் முடி சூட்டுவிழா' பேச்சு. ஸ்ரீ கிருஷ்ணசாமி பாலர் வித்யாலயாப் பள்ளி 8 புலியூர் 2 வது சாலை டிரஸ்டுபுரம், கோடம்பாக்கம், இரவு 7—30 மணி

## மதுரை வரும் ஜெ. பி.-க்கு கறுப்புக் கொடி

மதுரை: ஏப். 28—ஜெயப்பிரகாஷ் நாராயணன்மதுரை வரும்போது அவருக்கு அவருக்குகறுப்புக்கொடி காட்டப்படும என்று மதுரை மாவட்ட புது காங்கிரசும், இளைஞர் காங்கிரசும் அறிவித்துள்ளன.

மாவட்ட காங்கிரஸ் தலைவர்களான ஜி. பி. வி. ராஜுவும், என். கே. மகாலிங்க இதற்கான ஏற்பாடுகளைச் செய்து வருகிறார்கள்.

## பூட்டோவின் பயமுறுத்தல் பேச்சு: இந்திரா கவலை

**புதுடெல்லி, ஏப். 28—பாகிஸ்தானுக்கு ஆயுதம் ஏற்றுமதி செய்யக்கூடாது என்று விதிக்கப்பட்டிருந்த தடையை அமெரிக்கா நீக்கிய பிறகு பாகிஸ்தான் பிரதமரின் பேச்சில் விரோதப் போக்கும் பயமுறுத்தலும் அதிகமாகிவிட்டன என்று பிரதமர் இந்திரா காந்தி கூறினார்.**

நெதர்லாந்து நாட்டு டெலிவிஷனுக்கு இந்திரா பேட்டியளித்தார். அப்போது அவர் கூறியதாவது:—

பாகிஸ்தானுக்குள் ஆயுதங்கள் குவிக்கப்படுவது குறித்து இந்தியா கவலைப்படவில்லை, ஆனால், பாகிஸ்தானின் போக்கில் அது சில மாறுதல்களை ஏற்படுத்துகிறது.

பாகிஸ்தான் ஏற்கனவே பல ராணுவ ஒப்பந்தங்களிலும் பங்கு வகிப்பதால், அமெரிக்காவிலிருந்தும் மற்ற நாடுகளிலிருந்தும் ஏராளமான அளவில் அதற்கு ஆயுதங்கள் வருகிறது. இந்த நிலையில் அமெரிக்கா ஆயுதத் தடையை நீக்குவது மேலும் ஆபத்தான ஒரு சூழ்நிலையை ஏற்படுத்துகிறது. பாகிஸ்தான் ஒரு சிறிய நாடு. எந்த நாடும் அதைப் பயமுறுத்தவில்லை.

### முட்டுக்கட்டை

அமெரிக்காவுடனும், பாகிஸ்தானுடனும் உறவை அபிவிருத்தி செய்ய இந்தியா பேச்சுவார்த்தை நடத்தி வருகிறது. இந்த நேரத்தில் ஆயுதத் தடையை அமெரிக்கா நீக்கியிருப்பது எங்களுக்கு மிகவும் வியப்பளிக்கிறது. அமெரிக்காவின் போக்கால் பேச்சுவார்த்தையில் ஒரு முட்டுக்கட்டை நிலை தோன்றியிருக்கிறது.

பாகிஸ்தான் ஆயுதத்தைக் குவிப்பதால் இந்தியாவும் ஆயுதம்வாங்கும் போட்டியில் இறங்காது. பாகிஸ்தானில் உள்ள போர்க்குணம் கொண்ட ஒரு சிலர் இந்தியா மீது காட்டிவரும் பயமுறுத்தல் போக்கு மேலும் வலுவடையலாம்.

### அமெரிக்க உறவு

அமெரிக்காவுடனான இந்தியாவின் உறவு தொடர்ந்து அபிவிருத்தியடையும் என்று கருதுகிறேன்.

ரஷ்யாவின் பக்கத்தில் இந்தியா அதிகமாகச் சாய்வதாக மேற்கு நாடுகள் கருதுவது தவறாகும். ரஷ்யா—இந்தியாவின் நட்பு நாடாகும், ஆனால் அதே நேரத்தில் மற்ற நாடுகளுடன் நட்பாக இருப்பதற்கும் இந்தியா பெரு முயற்சி எடுத்து வருகிறது.

அமெரிக்காவிலிருந்து இந்தியா கணிசமான உதவியைப் பெற்று வருகிறது.

இந்தியாவுக்குக் கடன் உதவி வழங்கும் நாடுகளில் அமெரிக்கா முதன்மை வகிக்கிறது. இதை நாங்கள் பெரிதும் பாராட்டுகிறோம்.

டீகோகார்ஷியாவில் நிரந்தர ராணுவத்தளம் அமைவது ஆபத்தானதாகும்.

இந்தியாவின் எல்லா மாநிலங்களுக்கும் கணிசமான அளவுக்கு சுயாட்சி இருந்து வருகின்றது. ஆனால் காஷ்மீருக்கு தனி அரசியல் சட்டம் இருந்து வருகிறது என்பது மட்டும்தான் வித்தியாசம்.

### மேலும் அணு வெடிப்பு

இந்தியா அணு சோதனை நடத்தியபோது ஆட்சேபம் எழுப்பியவர்கள் சீனா அணு ஆயுதப்பெருக்கத்தில் ஈடுபட்டிருப்பதைக் காணாமல் இருக்கிறார்கள். இனிமேலும் அணுசோதனை நடத்தவேண்டும் என்று நாங்கள் கருதினால் அணுவெடி சோதனையை நடத்துவோம்.

இந்தியாவிடம் எந்தநாடும் ராணுவதளம் தேவை என்று கேட்கவில்லை. யாருக்கும் தளம்தர வேண்டும் என்பது இந்தியாவின் விருப்பமும் அல்ல.

### பணவீக்கம் குறைந்தது

பணவீக்கம் இந்தியாவுக்கு ஒரு பெரிய பிரச்னையாகும். ஆனால் கடந்த ஆண்டு செப்டம்பர் முதல் இது கட்டுப் படுத்தப்பட்டது. 30 சதவிகிதம் உயர்ந்த பணவீக்கம் தற்போது 9·5 சதவிகிதமாக குறைந்து விட்டது.

மேற்கண்டவாறு அந்தப் பேட்டியில் இந்திரா தெரிவித்தார்.



## வறட்சி நிதி ரூ. 10 லட்சம்

சென்னை, ஏப். 28—செங்கற்பட்டு மாவட்டத்தில் சுற்றுப் பயணம்செய்து வரும் முதலமைச்சர் கருணாநிதியிடம் செங்கற்பட்டு மாவட்டத்தின் சார்பில் ரூ. 10 லட்சம் வறட்சி நிவாரண நிதி அளிக்கப்பட்டது.

கலெக்டர் திவான் முகமது ரூ. 10 லட்சத்தை கருணாநிதியிடம் வழங்கினார்.

### சென்னையின் தண்ணீர்பஞ்சத்தைபோக்க

# கடல் நீரை குடி நீர் ஆக்க முடியுமா? நிபுணர் பேட்டி

**புதுடெல்லி, ஏப். 28—சென்னை நகரில் தண்ணீர் பஞ்சத்தைப் போக்க கடல்நீரை குடிநீராக்க முடியுமா? முடியும் என்கிறார்கள் நிபுணர்கள். ஆனால், இதற்கு 14 ஆண்டுகள் பிடிக்கும் என்கிறார்கள் அவர்கள்.**

குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் கந்தப்பன் கோவையில் பேசுகையில் வீராணம் திட்டம் நிறைவேறினால் சென்னையின் குடிநீர்ப்பஞ்சம் தீரும் என்று தெரிவித்தார்.

கடல்நீரை குடிநீராக்கும் திட்டம் பற்றி, டெல்லி சர்க்காரின் அணு சக்தி இலாகா ஆராய்ந்து வந்தது.

கடல்நீரை குடிநீர் ஆக்கும் திட்டம் பயனுள்ளதாக இருக்குமா? இதற்கு எவ்வளவு செலவு ஆகும் என்பது போன்றவிவரங்கள் குறித்து, அணு சக்தி இலாகாவினர் ஆராய்ச்சி நடத்தினார்கள்.

இதற்காக அணுசக்தியில் இயங்கும்தொழிற்சாலைஒன்று அமைத்து, கடல்நீரை குடிநீர் ஆக்கலாம் என்று ஒரு திட்டம் தயாரித்து இருக்கிறார்கள்

இந்த திட்டத்தை செயல் படுத்துவதற்கு ரூ. 178 கோடியே 50 லட்சம் செலவாகும்.

### 4 மடங்கு விலை

இந்த தொழிற்சாலையில் ஒரே நேரத்தில் மின்சார உற்பத்தியும் கடல்நீரை குடிநீர் ஆக்கும் வேலையும் நடைபெறும். தினமும் 5 கோடியே 60 லட்சம் காலன் சுத்த நீர் தயாரிக்கப்படும்.

சுத்தப்படுத்தப்படும் கடல் நீரின் விலை 1 காலனுக்கு 1 காசு வீதம் இருக்கும். இது, தற்போது விநியோகிக்கப் படும் குடி நீரின் விலையைவிட 4 மடங்கு அதிகம் ஆகும்.

### 14 ஆண்டுகள்

இந்த திட்டத்தை செயல் படுத்துவதற்கு உடனடியாக அனுமதி வழங்கினால், 14 ஆண்டு காலத்தில் இதற்கான தொழிற்சாலை அமைக்கப்பட்டு, வேலை செய்ய தொடங்கி விடும்.

இந்த திட்டத்தை செயல் படுத்தலாமா என்பது பற்றி இப்போது மத்திய சர்க்கார் தீவிரமாக பரிசீலனை செய்து வருகிறது.

### கந்தப்பன் கருத்து

கோவையில் குடிநீர் வடிகால் வாரிய தலைவர் கந்தப்பன் கருத்தரங்கு ஒன்றைத் துவக்கி வைத்துப் பேசுகையில் வீராணம் திட்டம் நிறைவேறினால் சென்னையின் குடிநீர்ப் பஞ்சம் தீரும் என்று கூறினார்.

சிறுவாணி திட்டம் நிறைவேறினால் கேரளா மற்றும் சுற்றுப் பகுதியின் தண்ணீர்ப் பஞ்சம் தீரும் என்றும் பிறகு 20 அல்லது 30 வருடங்களுக்கு தண்ணீர் பிரச்னையே இருக்காது என்றும் கந்தப்பன் கூறினார்.

## ஆபாசக் கதைகளை வெளியிடும் பத்திரிகைகளை எதிர்த்து இயக்கம்

சென்னை, ஏப். 28—ஆபாசக் கதைகளையும், படங்களையும் வெளியிடும் தமிழ்ப் பத்திரிகைகளுக்கு எதிராக 'தமிழ் வாசகர் வட்டம்' என்ற இயக்கம் துவங்கியுள்ளது.

இவ்வாறு ஆபாசமான கதைகளையும், படங்களையும் வெளியிடும் தமிழ்ப் பத்திரிகைகளுக்கு எதிராக ஒரு லட்சம் பேர்கள் கையெழுத்துக்களை இந்த இயக்கம் திரட்டுகிறது.

இதற்காக மயிலாப்பூரில் ஞாயிறன்று ஒரு கூட்டம் நடந்தது. பேராசிரியர் முத்து கருப்பன் பேசினார். ஆபாசக் கதைகளை வெளியிடும் தமிழ்ப் பத்திரிகை அலுவலகங்கள் முன்பாகக் கிளர்ச்சி நடத்தவேண்டும் என்று அவர் கூறினார்.

இந்தக் கூட்டத்திற்கு நாரண துரைக்கண்ணன் தலைமை வகித்தார்.

# வைத்திய ரத்தினம் பலராமய்யா பதிலளிக்கிறார்

## "சோரியாஸிஸ்" என்ற சரும நோய்

கேள்வி: என் மனைவி "சோரியாஸிஸ்" என்ற தோல் வியாதியால் கடந்த 2 ஆண்டு காலமாக மிகவும் அவதிப்படுகின்றாள். இவ்வியாதி வருவதும் பின் மறைவதுமாக உள்ளது. தஞ்சை மருத்துவமனை டாக்டர் 2 ஆண்டு காலமாக சிகிச்சை அளித்தும் பலனில்லை. இதற்குத் தகுந்த மருந்து சொல்ல வேண்டுகிறேன்.

கோவிந்தராஜன், நாகப்பட்டினம்.

பதில்: இச்சரும நோய்க்கு ஆங்கில மருத்துவத்தில் மருந்து கிடையாது. மனம் சஞ்சலமடைவதால் இந்நோய் வருகிறதென்று (Psychological) ஆங்கில மருத்துவம் சொல்கிறது. அதற்கு மருந்தும் ஆங்கில மருத்துவத்தில் கிடையாது.

இருப்பினும் சரும நோய்களுக்கு சொல்லப்பட்ட சில மருந்துகள் முழுமையும் ஒன்று மாற்றி ஒன்று கொடுத்து பரீட்சை செய்கின்றனர். இதனால் பாதகம் உண்டாகுமே தவிர நோய் குணமாகாது.

நூறுவருட வேப்பம்பட்டைக் கிடைத்தால் பாருங்கள். இல்லாவிடில் நன்றாக முதிர்ந்த அந்த மரத்தினுடைய பட்டை கிடைத்தாலும் போதும் அதைக் கொண்டு வந்து நிழலில் உலர்த்தி இடித்து சலித்து சூரணமாகக் வைத்துக்கொள்ளுங்கள்.

காலை வெறும் வயிற்றில் தேக்கரண்டியளவு இந்த சூரணத்தை பசும் பாலிலோ அல்லது தண்ணீரிலோ சாப்பிடவேண்டும். நாள் ஒன்றுக்கு ஒருவேளை போதும். தொடர்ந்து ஒரு வருடம் உட்கொண்டால் பூரணமாக குணமடைந்து விடும். முடிந்தால் வேப்பன் இலையை தண்ணீரில் போட்டு கொதிக்கவைத்து உடம்பின் மேல் ஊற்றி பிரதிதினமும் குளிக்கவும்.

மேற்படி சூரணத்தில் நாகமல்லி இலைச்சாறு ஊற்றி வெயிலில் வைத்து நன்றாக உலர்ந்த பின் மறுமுறையும் அரைத்து சலித்து வைத்துக் கொண்டு மேற்சொன்னபடி சாப்பிட்டால் நிச்சயமாக குணமாகும்.

★ ★ ★

## கண்ணில் வெள்ளை

கேள்வி:—எனக்கு வயது 43. எனது இடது கண்ணில் கறுப்பு விழிக்குமேல் வெள்ளையாக படர்ந்து இருக்கிறது. சுமார் 4 வருஷங்களுக்கு முன்பு இதுபோல் இருந்து ஆபரேஷன் செய்து சுத்தப்படுத்திக்கொண்டேன், திரும்பவும் அதுபோல் வெள்ளைப்படர்ந்துவிட்டது. மருந்து விபரம் எழுதும்படி கேட்டுக்கொள்கிறேன்.

எம். எச். மைதீன், சேலம்-1.

பதில்:— அம்மாம்பச்சரிசி என்ற மூலிகையை தோட்டத்தில் பார்க்கலாம். இதை வேருடன் பிடுங்கி மண் இல்லாமல் அலம்பி சுத்தமான உரலிலிட்டு இடித்து சாறு பிழிந்து வடிகட்டி ½ லிட்டர் அளவுக்கு எடுத்து ஒரு சீசாவில் அடைத்துக் கொள்ளுங்கள். மறுநாள் மேலோடு தண்ணீரைப் போலிருக்கும் சாற்றை வேறொரு புட்டியில் ஊற்றி அடைத்துக் கொண்டு காலை-மாலை கண்களில் 5, 6 சொட்டுகள் விடவும்.

பிரதி தினமும் 3 மாதங்கள் விட அப்படலம் ஆபரேஷனில்லாமலேயே குணமாகிவிடும். இந்த சாற்றை வாரத்துக்கொரு முறை தயார் செய்து கொள்ளவேண்டும்.

இம்முறைப்படி செய்து கொள்ள கஷ்டமானால் எலுமிச்சம்பழச் சாற்றில் 2 சொட்டுகள் கண்ணில் விட்டுக் கொண்டிருந்தாலும் போதும். கொஞ்சம் எரியும். ஆனால் படலம் கரைந்து வடும்.

★ ★ ★

## நாக்கு வெடிப்பு

கேள்வி: கடந்த 15 ஆண்டு காலமாக எனது நாக்கு அதிக வெடிப்பாக இருக்கிறது. நாட்டு வைத்தியம் பலமுறை செய்தும் குணமாகவில்லை, தாங்கள் இதற்கு ஒரு மருந்து சொல்ல வேண்டுமாய் கேட்டுக்கொள்கிறேன்.

தர்மலிங்கம், சேலம்.

பதில்:—அம்மாம் பச்சரிசியென்ற மூலிகையுள்ளது. அதில் சிகப்பு, பச்சையென்று இரு வகைகள் உண்டு. எதுவாயினும் பரவாயில்லை. அதை பாசிப்பருப்பு சேர்த்து சமையல் செய்து கீரை சாப்பிடுவதுபோல் அடிக்கடி சாப்பிட வாய்புண் ஆறும். மணத்தக்காளியையும் அடிக்கடி சாப்பிடுங்கள்.

ஆலமரம் அல்லது அத்தி மரம் ஏதாவது ஒரு மரத்திடம் சென்று கூர்மையான கருங்கல்லால் அடிமரத்தில் தட்டினால் பால் கசியும். விரலால் எடுத்து நாக்கில் தடவி காலை வெறும் வயிற்றில் சாப்பிடுங்கள். குறைந்தது 20 30 முறை அப்படி பிரதி தினமும் விரலால் எடுத்து சாப்பிடுங்கள். வாய்ப்புண் நிச்சயம் குணம் ஆகிவிடும்.

வாய்ப்புண் என்பது நாபியென்னும் தொப்புள்ளிலிருந்து வெப்பம் அதிகமாகிக் கடைசியில் நாக்கு புண்ணாகிறது. காரத்தைகுறைக்கவேண்டும். புலால் சாப்பிடக் கூடாது. குணமான பின்னும், கோழி, மீன, கருவாடு, எறு சாப்பிட்டால் மறுபடியும் திரும்பி வரும்.

★ ★ ★

## எப்போதும் உடம்பு உஷ்ணம்

கேள்வி: எனக்கு உடம்பு எப்பொழுதும்உஷ்ணமாகவே இருக்கிறது. சுரம் இருக்கிறதா என்று தெர்மாமீட்டரை வைத்துப் பார்த்தால், அதுவும் இல்லை. இதற்கு என்ன செய்யலாம்?

நவமணி, சென்னை

பதில்:—தங்கள் வயதென்னவோ தெரியவில்லை. தலைக்கு எண்ணெய் தேய்த்து குளிக்கிறீர்களோ இல்லையோ தெரியவில்லை. நம் நாட்டு வெட்ப தட்ப நிலைமைக்கு நல்லெண்ணெய் தலை குளி செய்வது மிகவும் முக்கியம்.

20 வயதுக்கு மேலாகவும் உடல் உஷ்ணம் அதிகமாக இருந்தால் அதை கர்ப போஷ்ணமென்று சொல்வர்.

நல்லெண்ணெயில் சீரகம் முழுசாகப் போட்டு காய்ச்சி சீரகம் கறுப்பாகும் சமயம் இறக்கி வாரத்துக் கொரு நாள் தலையில் தேய்த்து ½ மணிநேரம் ஊறிய பிறகு சிகைக்காய் தேய்த்து வெந்நீரில் குளிக்கவும்.

மணத்தக்காளி கீரையை இடித்து சாறுபிழிந்து அதன் அளவுக்கு நல்லெண்ணெய் சேர்த்து காய்ச்சி தைலம் செய்துகொண்டு அதை தலையில் தேய்த்து மேற்சொன்னபடி குளித்தால் உஷ்ணம் குறையும். ஆயுள் உள்ளவரை எண்ணெய் தேய்த்துக் குளிக்கும பழக்கத்தைவிடக் கூடாது. கண்கள் குளிரும்; உடல்வன்மை பெறும். மோர் பால், நெய் உணவில் உபயோகியுங்கள். புலால் சாப்பிடும் பழக்கமிருந்தால், கோழி, கருவாடு, எறு எப்போதும் சாப்பிடாதீர்கள்.

★ ★ ★

## தவறுக்கு பரிகாரம் தேடும் வாலிபர்

தெரிந்தோ தெரியாமலோ நான் செய்ததவறுக்கு பரிகாரம்தேடி நவமணிமூலமாகத்தங்களிடம்ஆலோசனைகேட்டிருந்தேன். தாங்களும், ரத்னபுஷ் அசுவகெந்தி ஆகியவற்றால் சூரணம் செய்து சாப்பிட்டு வரும்படி கூறியிருந்தீர்கள்.

அந்த மருந்துக்கான பத்தியங்கள் சிலவற்றை குறிப்பிட்டிருந்தீர்கள் அவைகளை குறித்துக்கொள்ள தவறிவிட்டேன், தயவு செய்து அந்த பத்திய முறைகள் என்ன என்ன என்பதை மட்டும் தெரியப்படுத்தவும்.

எம். டி. ஆர். திண்டுக்கல்.

பதில்:—முருங்கைப் பிசின் விந்துவைக் கட்டும். அதை நெய்யில் வறுத்து தூள் செய்து 2 சிட்டிகைகள் பசும் பாலில் கலந்து காலை—மாலை சாப்பிடலாம் இரவு படுக்கும்போது ஒருவேளை சாப்பிட்டாலும் போதுமானது தொடர்ந்து 6 மாதங்களாவது சாப்பிட வேண்டும். முன் சொன்ன ரத்னபுஷ், அசுவகெந்தி சூரணமும் சாப்பிடுங்கள்.

பத்தியம்:—புலால் சாப்பிடாதீர்கள். புளியை குறைக்கவேண்டும்.

★ ★ ★

## வியாதி என்ன?

கேள்வி:—என் வயது 62. மூல வியாதியால் கஷ்டப்பட்டேன். வயிற்றுவலி, வாந்தி, அஜீரணம் முதலிய தொந்தரவுகள் ஏற்பட்டு, ஒருவாறு குணமடைந்தது.

ஆனால் வயிற்றில் தொப்புளுக்குகீழ் தினந்தோறும் மாலை 4 மணி முதல் இரவு 10 வரை வயிற்றில் உருளுதல் போன்ற தொந்தரவுகள் ஏற்பட்டு, ஆசனவாயை ஒருகல்வைத்து அமுக்கினாற்போல தொந்தரவு ஏற்படுகிறது. பிறகு அரை மணிநேரம் படுத்தால் குணமாகிவிடுகிறது.

அப்பாசாமி, பட்டுக்கோட்டை.

பதில்: தங்கள் நோய் பாரிச வாயுவாக இருக்கலாமென்று தெரிகிறது. எப்போதும் சாவர மலம் கழியும்படி பார்த்துக் கொள்ளவும். கெச்சக்காயினுள்ளிருக்கும் பருப்பை கோழி முட்டை வெள்ளைக்கரு மாத்திரம் விட்டு அரைத்து ஒரு இட்டலி அளவு எடுத்துக் கொள்ளவும். அதை விளக்கெண்ணெயில் போட்டு காய்ச்சி வடை சுடும் பக்குவத்தில் எடுத்து— காய்ச்சிய எண்ணெயை ஒரு புட்டியில் அடைத்துக் கொண்டு காலை-மாலை தேக்கரண்டியளவு பசும்பாலில் விட்டு சாப்பிடவும். 2கரண்டிகள் கூட சாப்பிடலாம்.

வாயு குறைந்து வலி குறையும்.

★ ★ ★

## வாய்ப் புண்

கேள்வி:— என்னுடைய முடி மிகவும் செம்பட்டையாக இருக்கின்றது. அதிலும் தலையை சீவினால் முடி மிகவும் உதிர்கிறது. என்னுடைய முடி கறுத்து நீண்டு வளர ஒரு மருந்தை சொல்லுங்கள்

மற்றும் எனக்கு வாயில் அதிக புண்கள் வருகின்றன. அடிக்கடி வாய் வெந்து உதட்டிலும், நாக்கிலும் புண்கள் வந்துவிடுகின்றன. நான் படித்துக் கொண்டிருக்கிறேன். இந்த வாய்ப்புண்ணால் படிக்க மிகவும் கஷ்டமாக இருக்கின்றது. எவ்வளவு சாப்பிட்டாலும் நான் மெலிந்தே காணப்படுகின்றேன். உடலில் சதைப் பிடிப்பில்லை. எனக்கு வயது 18. நான் வாய்ப்புண் நீங்கி உடல் மெலிவு நீங்கி சதைப்பிடிப்போடு இருக்க ஒரு நாட்டு மருந்தை கூறுமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்ளுகின்றேன்.

நூர்ஜஹான் தஞ்சாவூர்.

பதில்: கரிசலாங்கண்ணி என்னும் மூலிகையுள்ளது. அதை பிழிந்த சார் ஒரு லிட்டர்; தேங்காய் எண்ணெய்— 1 லிட்டர்' இவ்விரண்டையும் கலந்து தைலம் செய்து கொண்டு தினமும் தலையில் தடவிக்கொள்ளுங்கள். முடி வளரும். மேற்படி தைலத்தில் அதிமதுரம் 30 கிராம் பசும்பாலில்அரைத்து தைலம் இறக்குவதற்கு 5 நிமிடங்களுக்குமுன் சேர்த்து மெழுகு பதமாக வரும்போது இறக்கி வடித்து உபயோகிக்கவும்.

இரண்டாவது கேள்வியிலுள்ளபடி பாலில் உடல் தேற்றும் மூலிகைகளைக் காய்ச்சி சாப்பிடுங்கள், கோழி, கருவாடு, எறு சாப்பிடாதீர்கள், உடல் மெலிந்து பல நோய்கள் வரும்.

வாய்ப் புண்ணுக்கு: கடையில் விற்கும் படிகாரம் 200 கிராம் வாங்கி அதை பொடி செய்து ஒரு சட்டியிலிட்டு அடுப்பேற்றி எரிக்கவும். அது உருகி வெண்மையாக பொரிந்த பின் இறக்கி பொடி செய்து கொள்ளுங்கள். அதன் அளவுக்கு கால் பங்கு நாட்டு மருந்து கடையில் விற்கும் பூங்காவி மேற்படி பொரித்த படிகாரத்துடன் கலக்கி வைத்துக் கொண்டு ½ தேக்கரண்டியளவு காலை — மாலை நெய்யில் சாப்பிடவும்.

சோற்றுக் கற்றாழையின் மேல் மட்டைகளை சீவி உள்ளிருக்கும் சோற்றை தண்ணீரில் 10 முறை கழுவி குழகுழப்பான தண்ணீரை வடித்துவிட்டு மேற்படிசாறுடன் கொஞ்சம வதக்கிய வெங்காயம், வறுத்த சீரகம்கொஞ்சம், பனங்கற்கண்டு வேண்டிய அளவு சேர்த்து ஒரு கரண்டியளவு நிறையகாலை — மாலை சாப்பிடுங்கள். வயிற்றுப் புண், வாய்ப்புண் ஆறும். உடல் தேறும்.

★ ★ ★

## கட்டி

கேள்வி;—கடந்த 2 ஆண்டுகளுக்கு முன் எனக்கு இடது பக்கத்தொடையின் கீழ் உள்புறத்தில் ஆண்மை உறுப்பின் அருகில் நெல்லிக்காய் அளவு உருண்டையாக ஏதோ தென்பட்டது. இப்பொழுது எலுமிச்சம் பழ அளவு பெரிதாகிவிட்டது. நடக்கும் போதும் நிற்கும்போது லேசாக வலி உண்டாகிறது. கையால் அழுத்தினால் உள்ளே சென்று மறுபடியும் வந்து விடுகிறது. இது குணமாக வழி கூற வேண்டுகிறேன்.

குணசேகரன், தாசவநாய்க்கன் பட்டி, கோவை.

பதில்;- உங்களிருக்கும் நோய் பாரிசவாயு (Hernia) போல்தோன்றுகிறது. ஆதற்கு கெச்சக்காயிலுள்ள பருப்புகள் ஐந்து எடுத்து. கோழி முட்டை வெள்ளைக்கரு விட்டு பருப்புகளை வெண்ணை போல அரைத்து வடைபோல் தட்டி விளக்கெண்ணெய் ½லிட்டரில் அவ்வடையை போட்டு சிறு நெருப்பில் வைத்துக்காய்ச்சி சிடுசிடுப்பு அடங்கியதும் இறக்கிவிடவும்.

அவ்வெண்ணெய் வடித்து வைத்துக்கொண்டு இரண்டு தேக்கரண்டியளவு காலையில் வெறும் வயிற்றில் பிரதி தினமும் 20 நாட்கள் சாப்பிடவும் தொந்திரவு இருக்காது. மறுமுறை கண்டால் அதைப் போன்றே சாப்பிடவும்.

சாப்பாடு அளவுடன் சாப்பிட வேண்டும். உணவு அதிகப்பட்டால் இந்நோய் அடிக்கடி வரும். காலா காலத்தில் குறைத்து சாப்பிடவும்.

இரவு படுக்கும்போது முதல் கேள்வி பதிலில் கண்ட சூரணத்தை செய்து வைத்துக் கொண்டு தேக்கரண்டி யளவு வெந்நீரில் சாப்பிடவும்.

ஆங்கில மருத்துவத்தில் இதற்கு ஆபரேஷன்தான் செய்வார்கள். மருந்து கிடையாது.

# இந்தியாவுடன் சிக்கிம் இணைந்தது

புதுடெல்லி, ஏப். 28—சிக்கிமை இந்திய யூனியனில் 22-வது மாநிலமாகச் சேர்க்கும் 36-வது அரசியல் சட்ட திருத்தத்துக்கு ராஜ்ய சபை அங்கீகாரம் அளித்தது.

இந்த மசோதா ராஜ்ய சபையில் நிறைவேற்றப்பட்ட தேதியிலிருந்து அமுலுக்கு வந்ததாகக்கருதப்படும்என்று மசோதா கூறுகிறது. ஆகவே நேற்றுடன் சிக்கிமில் மன்னர் ஆட்சிமுறை ஒழிந்து, சிக்கிம் இந்திய யூனியனின் 22-வது மாநிலமாகிறது.

# திருவேற்காடு வரை 27சி பஸ்

சென்னை, ஏப். 28—வடபழனிக்கும் அரும்பாக்கத்துக்கும் இடையே ஓடிக்கொண்டிருந்த 27-சி பஸ்கள் திருவேற்காடு வரை நீடிக்கப்பட்டுள்ளன.

விமான நிலையத்துக்குச் செல்லும் டிலக்ஸ் பஸ்களின் எண்ணிக்கை 2லிருந்து 3 ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

# சுரங்கம் வெட்ட அணுகுண்டு வெடிப்பு: நிபுணர் பேட்டி

புதுடெல்லி, ஏப். 28—நிலத்துக்கு அடியிலிருந்து அதிக அளவில் பெட்ரோல் எடுக்கவும் செம்பு போன்ற கனிகளை வெட்டி எடுக்க சுரங்கங்களைத் தோண்டவும் பூமிக்கு அடியில் அணுகுண்டுகளை வெடித்துப் பலன் பெறமுடியும் என்று இந்திய அணுசக்தி நிபுணர் டாக்டர் ராஜா ராமண்ணா கூறியுள்ளார்.

பம்பாயிலுள்ள பாபா அணுசக்தி ஆராய்ச்சி நிலைய டைரக்டரான அவர் டெல்லியில் தொழிலியல் ஆராய்ச்சிக்கான ஸ்ரீராம் கழகத்தில் உரை நிகழ்த்துகையில் இவ்வாறு கூறினார்.

கடந்த ஆண்டு மேமாதம் இந்தியா பூமிக்கு அடியில் வெற்றிகரமாக தனது முதலாவது அணுகுண்டை வெடித்தது நினைவிருக்கலாம். இதில் ராஜா ராமண்ணா முக்கிய பங்கு பெற்றிருந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

அவர் பேசுகையில் 'நதிகளை இணைக்க கால்வாய்களை வெட்டுவது, துறைமுகங்களைத் தோண்டுவது, பாலைவனப் பகுதிகளில் நீர்வளங்களைத் தேடுவது போன்ற வேலைகளுக்கு அணுகுண்டுகளை வெடித்துப் பயனபடுத்த முடியும். ஆனால் இவ்விதம் செய்ய இந்தியாவினால் இப்போது சிந்தித்துப் பார்க்க முடியாது" என்றார்.

ஏனெனில் இவ்விதக் காரியங்களுக்கு நிறைய அணுகுண்டுகளை பூமிக்கு அடியில் அமைத்து ஒரே சமயத்தில் அல்லது அடுத்தடுத்து வெடித்தாக வேண்டியிருக்கும் என்றார் அவர்.

ஆனாலும் இப்போது நிலத்துக்கடியில் உள்ள எண்ணெய் ஊற்றுகளிலிருந்து அதிக அளவில் பெட்ரோலிய எண்ணெய் எடுக்கவும் செம்பு போன்ற கனிகளை வெட்டி எடுப்பதற்கான சுரங்கங்களைத் தோண்டவும் இந்தியாவினால் பூமிக்கு அடியில் அணுகுண்டுகளை வெடிக்க முடியும். ஏனெனில் இவ்விதக் காரியங்களுக்கு ஒரே நேரத்தில் பல அணுகுண்டுகளை வெடிக்கவேண்டிய அவசியமில்லை. குறைந்த திறன் கொண்ட ஓர் அணுகுண்டை வெடித்தாலும்போதும்என்று ராஜா ராமண்ணா சொன்னார்.

உதாரணமாக பெட்ரோலிய எண்ணெய் ஊற்றிலிருந்து அதிக பெட்ரோல் கிடைக்கச் செய்ய இவ்விதம் அணுகுண்டை வெடிப்பதானால் முதலில் அந்த இடத்தில் நில உட்கூறு பற்றியும், மற்றும் பல அம்சங்கள் பற்றியும ஆராய்வுகளை நடத்தியாக வேண்டும்.

அணுகுண்டுகளை பூமிக்கடியில் வெடித்து பல்வேறு வகையான ஆக்கபூர்வமான பணிகளுக்குப் பயன்படுத்த முடியும் என்று ராஜா ராமண்ணா மேலும் பேசுகையில் கூறினார். இவ்விதம் அணுகுண்டுகள் வெடிக்கப்படுகிற இடங்களில் உள்ள பாறைகளைப் பொறுத்தும், அணுகுண்டுகள் எவ்வளவு ஆழத்தில் வெடிக்கப்படுகின்றன என்பதைப் பொறுத்தும் வெவ்வேறான பலன்கள் கிட்டும் என்றார் அவர்.

உதாரணமாக குறைவான ஆழத்தில் வெடித்தால் பெரிய பள்ளம் ஏற்பட்டு, அதை நீர்த்தேக்கமாக மாற்றமுடியும் என்று அவர் குறிப்பிட்டார்.

### பாதாளக் குகைகள்

அதே நேரத்தில் உப்புப் பாறைகள் உள்ள இடத்தில் மிக ஆழத்தில் அணுகுண்டை வெடித்தால், பாதாள குகைகள் ஏற்பட்டு அதில் சில வகைப்பொருட்களை சேமித்து வைக்க முடியும். அல்லது ஆபத்தான கதிர் வீச்சு கொண்ட அணுசக்தி கழிவுப் பொருட்களை இவ்விதக் குகைகளில் போட்டு மூடிவிடலாம் என்றும் அவர் கூறினார்.

### 515 பாதாள அணுகுண்டு சோதனைகள்

ராஜா ராமண்ணா மேலும் பேசுகையில் இதுவரை பல்வேறு நாடுகளும் பூமிக்கு அடியில் 515 அணுகுண்டு வெடிகளை நடத்தியுள்ளன என்று தெரிவித்தார். அமெரிக்கா 366 பாதாள அணுகுண்டு வெடிகளையும், ரஷியா 129 பாதாள அணுகுண்டு வெடிப்புகளையும் நடத்தியுள்ளன. பிரிட்டன் 5 வெடிப்புகளையும் பிரான்ஸ் 13வெடிப்புகளையும் சீனா ஒரு வெடிப்பையும் இந்தியாஒருவெடிப்பையும் நடத்தியுள்ளன என்றும் அவர் கூறினார்.

இவற்றில் 81 வெடிப்புகள் தான் ஆக்கப்பூர்வ காரியங்களுக்காக நடத்தப்பட்டன.

நிலத்துக்கடியிலிருந்து எரிவாயு, பெட்ரோலிய எண்ணெய் செப்புக்கனி ஆகியவற்றை எடுப்பது சம்பந்தமாக அமெரிக்கா பாதாள அணுகுண்டுவெடிப்புகளை நடத்தியுள்ளது.

### நதியைத் திருப்ப அணுகுண்டு

ரஷியா இறுகிய எரிவாயுவை சேமித்து வைக்க பாதாளக் குகைகளை ஏற்படுத்துவதற்காக பாதாள அணுகுண்டுகளை வெடித்துள்ளது தவிர, வடக்கு நோக்கி ஓடும் நதியை தெற்கு நோக்கித் திருப்பிவிடுவதற்காக ரஷியா சமீபத்தில பல அணுகுண்டுகளை வெடித்துள்ளது என்றும் ராஜா ராமண்ணா கூறினார்.

# போக்குவரத்து ஊழியருக்கு வீடுகள்: கருணாநிதி உறுதி

மதுரை, ஏப். 28—பாண்டியன் போக்குவரத்து ஊழியர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுப்பது பற்றி முதல்வர் கருணாநிதி உறுதி கூறினார்.

உடல் ஊனமுற்றோருக்கு கருவிகள் வழங்கும் விழாவும், பாண்டியன் போக்குவரத்துக் கழக புதிய பணிமனை திறப்பு விழாவும் அமைச்சர் செ. மாதவன் தலைமையில் நடைபெற்றது.

இவ்விழாவில் அமைச்சர்கள் ஓ. பி. ராமன், சாதிக் பாட்சா, சி. வி. எம். அண்ணாமலை ஆகியோர் பேசினார்கள்.

கருணாநிதி பேசுகையில் போக்குவரத்து ஊழியர்களுக்கு இலவசபாஸ் கொடுப்பது பற்றி வேறு போக்குவரத்து கழகங்களில் எப்படி இருக்கிறது என்பதை போக்குவரத்துத் துறையினரிடம் கலந்து கூறுகிறேன் என்றார். இப்படி கூறுவதால் இதை அறவே புறக்கணிக்கவில்லை என்பதை கூறிக்கொண்டு வீட்டுவசதிக்கும் ஆவன செய்யப்படும் என்றும் தெரிவித்துக்கொள்கிறேன் என்று கருணாநிதி கூறினார்.

# சிமெண்ட் ஆலை தொழிலாளர் ஸ்டிரைக்: மந்திரி சமரச பேச்சு

சென்னை, ஏப். 28—நாடு முழுதும் மே 16ந் தேதி முதல் சிமெண்ட் தொழிற்சாலைகளில் ஆரம்பமாகவிருக்கும் ஸ்டிரைக்கைத் தவிர்க்க கூட்டுச் சமரசக் கமிட்டி உறுப்பினர்கள் மகாநாட்டை மே மாதம் 6ந் தேதியன்று நடத்த மத்திய தொழில் மந்திரி டி. ஏ. பை சம்மதித்திருக்கிறாரென்று இந்திய தேசிய தொழிற்சங்க காங்கிரஸ் (ஐ. என். டி. யு. சி.) பொதுக் காரியதரிசி ஜி. ராமானுஜம் கூறியுள்ளார்.

கூட்டுப் பேச்சு வார்த்தைக் குழுவின் பரிசீலனையின் கீழ் எல்லா சிமெண்டுதொழிலாளிகளும் வந்தால்தான் பிரச்னைகளுக்கு உண்மையான தீர்வு காண இயலுமென்றார். நியாயமான சமரஸப் பேச்சுக்குரிய சூழ்நிலை அமைந்திருப்பதைக் கெடுக்க வேண்டாமென்றும் கேட்டுக் கொண்டார்.

# ஆஸ்பத்திரியில் வாண்டையாரும் மர்மத்தீவு மன்னனும்

சென்னை, ஏப். 28— கடத்தல் நடவடிக்கைகளில் ஈடுபட்டதாகக் கைது செய்யப்பட்ட மாரியப்ப வாண்டையார் ஜெனரல் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டுள்ளார்.

இவர், சென்னை மத்திய சிறையில் காவலில் வைக்கப்பட்டிருந்தார்.

தமிழ்நாடு அசெம்பிளியில் துண்டுப்பிரசுரம் வீசியதற்காக 15 நாள் சிறைத் தண்டனை விதிக்கப்பட்ட 'மர்மத்தீவு மன்னன்' எனப்படும் பரசுராமன்என்பவரும்மார்பு நோய் சிகிச்சைக்காக ஜெனரல் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டுள்ளார்.

# வறட்சி நிவாரண நிதி

சென்னை, ஏப். 28—முதலமைச்சர் திரட்டும் வறட்சி நிவாரண நிதிக்கு நேற்று வரை ரூ. 1 கோடி 51 ஆயிரத்து 701 வசூலாகியுள்ளது.

# கல்கத்தா நகருக்கு ஆபத்து: காற்றில் விஷம் பரவுகிறது

கல்கத்தா, ஏப். 28—கல்கத்தா நகரில் ஒவ்வொரு அங்குலமும் விஷச் சத்து அடங்கிய காற்றால் சூழப்பட்டிருக்கிறது என்று புகை தொந்தரவு கமிஷன் செய்த சர்வே கூறுகிறது.

கல்கத்தா வட்டாரத்தில் உள்ள காற்றில் நைட்ரஜன் ஆக்சைட் ஏற்கனவே 5 சத விகிதத்தை தாண்டிவிட்டது. காற்றில் நைட்ரஜன் ஆக்சைட், கந்தக ஆக்சைட் ஆகியவைகளின் பங்கு, அபாய அளவான 7 சத விகிதத்தையும், 10 சதவிகிதத்தையும் விரைவாக நெருங்கிக் கொண்டிருக்கின்றன.

கல்கத்தாவில் வீடுகளில் இன்னமும் நிலக்கரி கொண்டே அடுப்பு எரிக்கப்படுகிறது. தினசரி சுமார் 15 லட்சம் அடுப்புகள் இரண்டு வேளையும் புகை கக்குகின்றன.

இதைத் தவிர ஹூக்ளி நதியின் கரைகளில் இருக்கும் சுமார் 15 ஆயிரம தொழிற்சாலைகள் 24 மணி நேரமும் புகையை கக்குகின்றன. நூற்றுக் கணக்கான கப்பல்களும், ரெயில் எஞ்சின்களும், லட்சத்திற்கும் அதிகமான மோட்டார் வண்டிகளும் லாரிகளும் சுற்றுப்புற காற்றை அசுத்தப் படுத்துவதில் பெரும் பங்கு வகிக்கின்றன.

நகரை தண்ணீர் விட்டு சுத்தப்படுத்தும் வழக்கம் நிறுத்தப்பட்டு விட்டதால் இந்தப் பிரச்னை இன்னும் பெரிதாக வளர்ந்து விட்டது என்று அதிகாரி கூறினார்.

லேசாக காற்றடித்தால்கூட கீழே கிடக்கும் தூசி ஆகாயம் வரை கிளம்பி காற்றை அசுத்தப்படுத்துகிறது.

கிட்டதட்ட 70 லட்சம் மக்கள் வசிக்கும் கல்கத்தாவில் பெரும்பாலானவர்களுக்கு இதனால் ஆஸ்த்மாபோன்ற மூச்சு குழல் சம்பந்தமான நோய்களால் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள்.

கர்சன் பிரபு காலத்தில்—அதாவது 70 வருடங்களுக்கு முன்பு புகை தொந்தரவு சட்டம் வங்களத்தில் அமுலுக்கு கொண்டு வரப்பட்டது. இந்த சட்டம் தொழிற்சாலைகளிலிருந்தும் வீடுகளிலிருந்தும் வரும் புகையை ஒழுங்கு படுத்துவதற்காகக் கொண்டு வரப்பட்டது.

இன்னமும் கல்கத்தாவில் 95 சதவிகித வீடுகளில் நிலக்கரியையே சமையல் செய்வதற்கு பயன்படுத்துகின்றார்கள்.

இந்தச் சட்டத்தை கடுமையாக அமல் செய்வதற்காக 7 ஊழியர்கள் இருந்த அந்தத் துறை 10 ஊழியர்கள் கொண்டதாக விரிவு செய்யப்பட்டது.

நிலக்கரியையும் வீட்டு அடுப்புகளையும் இந்த சட்டத்தின் கீழ் கொண்டுவர 1972ம் ஆண்டு வங்காள அரசு ஒரு மசோதாவை தயாரித்தது. அந்த மசோதா என்ன ஆயிற்று என்று இதுவரை தெரியவில்லை.

நோயாளியை ஏற்றிச்சென்ற

## கார்மீது பஸ் மோதல்: 3 பேர் சாவு

கோவை, ஏப். 28-கோவை ஆஸ்பத்திரிக்கு நோயாளியை ஏற்றிக்கொண்டு வந்த கார் மீது, ஒரு பஸ் மோதியதால் காரில் இருந்த 3 பேர் பரிதாபமாக செத்தார்கள்.

கிருஷ்ணசாமி கவுண்டர் (வயது 50), ராமாத்தாள் (35), பொன்னுமுத்து (வயது 26) கார் டிரைவர். திருமணம் ஆகாதவர் ஆகியோர் மாண்டனர். மற்றும் 3 பேர் காயமடைந்தனர்.

இவர்களில் கமலவேணி (வயது 24) ஒருவர்.

இவரை உடல் பரிசோதனைக்காக ஆஸ்பத்திரிக்கு கொண்டு சென்றபோதுதான் இந்த விபத்து நடந்தது.

## தமிழக எல்லைக்குள் கண்ணகி கோவில்

மதுரை, ஏப். 28—கம்பம் பள்ளத்தாக்கில் கண்டு பிடிக்கப்பட்ட சேரன் செங்குட்டுவன் கட்டிய கண்ணகி கோவில் தமிழக எல்லைக்குள் தான் இருக்கிறது என்று சர்வே அதிகாரி சர்வே செய்து உண்மையான தகவலைக் கூறியுள்ளார்.

கூடலூரை ஒட்டியுள்ள வண்ணாத்திப்பாறை மலைப் பகுதியில் இக்கோவில் உள்ளது. மங்கலதேவி அம்மன் கோயில் என்றும் இதைச் சொல்வது வழக்கம்.

'இக்கோயில் தமிழக எல்லைக்குள் இல்லை. கேரளா எல்லைக்குள் தான் இருக்கிறது' என்று கேரள அரசு சொல்லி வந்தது. இப்போது, அது தமிழக எல்லைக்குள் தான் இருக்கிறது என்பது கண்டு பிடிக்கப்பட்டு விட்டது.

மசால்வடை வைத்து எலியைப் பிடிப்பதுபோல்

# சினிமாவைக்காட்டி மக்களை ஏமாற்ற முடியுமா? காமராஜ் பேச்சு

ஆற்காடு, ஏப். 28—மசால்வடை வைத்து எலியைப் பிடிப்பது போல், சினிமா கவர்ச்சியைக் காட்டி மக்களை ஏமாற்றுகிறார்கள் என்று காமராஜ் கூறினார்.

ஆனால், எலிகளைப் போல் மக்கள் ஏமாறமாட்டார்கள் என்றும் காமராஜ் பேசினார்,

வட ஆற்காடு மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்து வரும் காமராஜ் வேலூரை அடுத்த பல பகுதிகளிலும் பொதுக் கூட்டங்களில் பேசினார்.

அப்போது அவர் எம். ஜி. ஆரை மறைமுகமாகத் தாக்கிப் பேசினார்.

''தி. மு. க. ஆட்சியின் முடிவு காலம் நெருங்கிவிட்டது. இதை உணர்ந்துதான் இதிலிருந்து பிரிந்து சிலர் வேறு பெயரில் வருகிறார்கள். அவர்கள் ஆட்சிக்கு வந்தால் மறுநாளே மக்கள் வயிறு முழுவதும் காய்ந்துவிடும். ஆகவே மக்கள் எச்சரிக்கையாக இருக்கவேண்டும்'' என்றார் காமராஜ்.

### விளம்பரம் செய்யவில்லை

''கிராம மக்கள் நல்வாழ்வு வாழவேண்டும்—கிராமங்கள் வளர்ச்சி அடையவேண்டும்—நாட்டின் வளர்ச்சிக்கே அடிப்படை கிராம வளர்ச்சிதான் என்று தேசபிதா காந்தியடிகள் கூறினார்.

அதன் அடிப்படையில் உண்மையான ராமராஜ்யம் நடைபெற பஞ்சாயத்துக்கள் ஏற்படுத்தி கிராம ராஜ்யம் நடைபெற—கிராம மக்கள் வளர்ச்சிபெற காங்கிரஸ் ஆட்சியில் நாம் வழி செய்தோம்.

ஆனால் நாம் விளம்பரப் படுத்திக் கொள்ளவில்லை.

இன்றைய ஆட்சியாளர்களுக்கு சுயவிளம்பரம்தான் கவனமாக இருக்கிறது. மற்ற எந்த காரியமும் அவர்கள் கவனத்தில் இல்லை.

எப்படியாவது பதவியில் இருக்கவேண்டும். அதுதான் இவர்கள் கவலை—அடிப்படை பிரச்சினை—உண்மை இவைகளை ஆட்சியாளர்கள் புரிந்து கொள்வதில்லை.

ஆடம்பர வாழ்வில் செலவு செய்யும் பழக்கமும் நமக்கு ஏற்பட்டு விட்டது.

ஆடம்பரப் பொருள்கள் வெளி நாட்டு பொருள்கள் மீதுள்ள மோகத்தை ஒழிக்க வேண்டும்.

இந்த மோகத்தின் காரணத்தினால் தான் கள்ளக் கடத்தல் பெருகியது. நமது தொழில் வளர்ச்சி குறைந்தது.

### முதல்வரின் கோபம்

நாட்டில் உள்ள உண்மையான நிலவரங்களை — நடப்புகளை கூறினால் முதலமைச்சருக்கு கோபம் வந்துவிடுகிறது.

உண்மைகள் அவருக்கு புரிவதில்லை. பொய்தான் இன்று லாபகரமான தொழிலாக உள்ளது. எனக்கு இத்தகைய லாபம் தேவையில்லை. பொய்யினால் வரும் லாபம் நிரந்தர லாபமாக இருக்காது.

### ஏன் பிரிந்தார்?

இன்னொருவர் தி. மு. க. விலிருந்து பிரிந்தவர். தி. மு. க. போய்விடும் என்பதால் பிரிந்தவர் வேறு விதமாக மக்களை ஏமாற்ற வருகிறார்.

சினிமா மோகத்தினால் மக்களை ஏமாற்றிவிடலாம் என நினைக்கிறார்.

இவர் ஆட்சிக்கு வந்தால் மறுநாளே மக்கள் வயிறு முழுவதுமாக காய்ந்துவிடும்.

### மசால் வடையும் சினிமா கவர்ச்சியும்

எலிப் பொறியில் மசால் வடையை வைத்து எலியை பிடிப்பார்கள். அதுபோன்று தமது சினிமா கவர்ச்சியை காட்டி மக்களை ஏமாற்றலாம் என இவர் நினைக்கிறார். மக்கள் ஏமாறமாட்டார்கள். மக்கள் என்ன எலியா—ஏமாறுவதற்கு — எக்காரணத்தைக் கொண்டும் இனி மக்களை ஏமாற்ற முடியாது.

மேற்கண்டவாறு காமராஜ் பேசினார்.

கைத்தறிக்கு நிவாரணம்

## தென்னகத்துக்கு ரூ. 4 கோடி மத்திய அரசு கடன்

புதுடெல்லி, ஏப். 28—தேங்கிக் கிடக்கும் கைத்தறித் துணிகளை வாங்குவதற்கு தென்னக மாநிலங்களுக்கு ரூ 4 கோடி கடன் வழங்க மத்திய அரசு முடிவு செய்திருக்கிறது.

அகில இந்திய கைத்தறியாளர் காங்கிரஸ் பொதுச் செயலாளர் ப்ரகட கோட்டையா இத்தகவலை நேற்று நிருபர்களிடம் தெரிவித்தார்.

தென்னகத்தைச் சேர்ந்த 4 மாநிலங்களிலும் ரூ. 45 கோடி மதிப்புடைய கைத்தறித்துணிகள் விற்பனையாகாமல் தேங்கிக் கிடப்பதாக கோட்டையா கூறினார்.

மத்திய வர்த்தக மந்திரி சட்டோபாத்தியாயா ரூ. 4 கோடி தர ஒப்புக்கொண்டதாக அவர் தெரிவித்தார்.

நெசவாளர்களுக்கு குறைந்த விலை நூலை சப்ளை செய்ய கிராமங்களில் 24 அல்லது 48 தறிகளைக் கொண்ட சிறிய நூற்பாலைகளை நிறுவ தமிழக அரசு மேற்கொண்ட முயற்சியை அவர் பாராட்டினார்.

திருப்பூரில் சுமார் 250 நிறுவனங்கள சோதனை அடிப்படையில் இயங்கி வருவதாக அவர் தெரிவித்தார்.

## வாழ்க கோஷம் போதும்; நிதி கொடுங்கள்: ஜெ. பி. பேச்சு

கான்பூர், ஏப். 28—வாழ்க கோஷத்தைக் கேட்டு சலித்து விட்டது. கோஷத்தை நிறுத்தி நிதி கொடுக்க முன் வாருங்கள் என்று ஜெயப்பிரகாஷ் நாராயணன் கூறினார்.

கான்பூரில் நேற்று ஜெயப்பிரகாஷுக்கு ரூ. 2½ லட்சம் நிதி அளிப்பதாக அறிவிக்கப் பட்டிருந்தது. ஆனால், ரூ. 31 ஆயிரம் தான் தரப்பட்டது.

பொதுக் கூட்டத்தில் பேச எழுந்ததும் ஜெயப்பிரகாஷ். முதலில் இதைக் குறிப்பிட்டார். இந்தச் சின்ன தொகை தான் கிடைக்கும் என்று ஏற்கனவே தெரிந்திருந்தால் வந்திருக்கவே மாட்டேன் என்று ஜெயப்பிரகாஷ் கூறினார்.

ஜெயப்பிரகாஷ் வரும் போது 'வாழ்க' என்று மக்கள் கோஷமிட்டனர். இப்படி கோஷத்தை கேட்டு சலித்து விட்டது என்று சொன்னார் ஜெயப்பிரகாஷ் கோஷங்களால் எவ்வித பயனும் இல்லை. உண்மையில என் இயக்கத்தை ஆதரிப்பதாக இருந்தால் தாராளமாக நிதி உதவி தரவேண்டும் என்று ஜெயப்பிரகாஷ் கூறினார்.

உத்திரப பிரதேசத்திலே மே 10-ம் தேதி முதல் புதிய போராட்டம் ஆரம்பிக்கப் போவதாக ஜெயப்பிரகாஷ் கூறினார்.

கோதுமைக்கு குவிண்டால்

(7-ம் பத்தி பார்க்க)

## தமிழ்நாடு, ஆந்திரா இடையில் கூடுதல் பஸ்கள்

சென்னை, ஏப். 28—தமிழ்நாட்டுக்கும் ஆந்திராவுக்குமிடையில் மேலும் சில வழித்தடங்களில் பஸ்கள் விடுவதற்காக, இரு மாநிலங்களுக்குமிடையில் துணை ஒப்பந்தம் ஒன்று கையெழுத்தாக இருக்கிறது.

தமிழ்நாடு போக்குவரத்து மந்திரி எஸ். ராமச்சந்திரனும் ஆந்திரபோக்குவரத்து மந்திரி சொக்காராவும் நேற்று சென்னை தலைமைச் செயலகத்தில் பூர்வாங்கவிவாதம் நடத்தினர்

ஏற்பட இருக்கும இந்த புதிய ஒப்பந்தத்தின் கீழ் இரு மாநிலங்களுப கூடுதலாக தலா 2000 கிலோ மீட்டர் ரூட்டுகளில் பஸ்கள் விட வகை செய்யப்படும்.

திருப்பதி, நெல்லூர், விஜயவாடா, சென்னை, திருவண்ணாமலை ஆகிய இடங்களுக்கு தற்போது விடப்படும் பஸ்களின் எண்ணிக்கையை அதிகரிக்கவும் வகைசெய்யப்படும்என்று அமைச்சர் ராமச்சந்திரன் நிருபர்களிடம் கூறினார்.

## சைகோன் நகருக்கு ஆபத்து: புரட்சிப்படை ராக்கெட் தாக்குதல்

சைகோன், ஏப். 28—தெற்கு வியட்நாமின் தலைநகரான சைகோன்மீது புரட்சிப்படைகள் ராக்கெட் தாக்குதலை துவக்கியுள்ளன. சைகோன் நகரிலிருந்து தப்பிச் செல்ல முடியாதபடி எல்லா வழிகளும் அடைபட்டுவிட்டன.

தெற்கு வியட்நாமில் நடைபெறும் போரின் இறுதிக் கட்டமாக புரட்சிப் படைகள் நேற்று ராக்கெட் தாக்குதலைத் துவக்கின. 1973-ம் ஆண்டில் சமாதான ஒப்பந்தம் கையெழுத்தானதற்குப் பிறகு சைகோன்மீது புரட்சிப் படைகள் தாக்குதல் நடத்துவது இதுவே முதல் தடவையாகும்.

ராக்கெட் தாக்குதல் காரணமாக 6 பேர் இறந்தனர். 22 பேர் காயமடைந்தனர். பல வீடுகள் தீப்பற்றின.

சைகோன் மீது ராக்கெட் தாக்குதல் துவங்கிய அதே நேரத்தில் சைகோனை அடுத்துள்ள லோகதான் மாவட்டம் புரட்சிப் படைகள் வசமாகிது புரட்சிப் படைகள் முன்னேறி வருவதால் லட்சக்கணக்கான அகதிகள் சைகோன நகரை நோக்கி ஓடி வருகின்றனர், தெற்கு வியட்நாம்படையைச் சேர்நத போர் வீரர்கள் பலரும் போரைக் கைவிட்டு சைகோன் நகரை நோக்கி ஓடிவந்த வண்ணம் உள்ளனர்.

இதனால் சாலைகள் அடைபட்டுவிட்டன. எனவே போர்ப் பகுதிக்கு தெற்கு வியட்நாம் அரசினால் மேற்கொண்டு போர்ப் படைகளை அனுப்பமுடியாத நிலை உள்ளது.

வியட்நாம் போரில் தெற்கு வியட்நாமின் தலைநகரான சைகோன் எப்போது புரட்சிப் படைகள் வசமாகும் என்ற கேள்வி மேலோங்கி நிற்கிறது.

### ஜனாதிபதி மாற்றம்

அநேகமாக தலைநகர் ஒன்று தான் பாக்கி என்ற நிலையில் எப்படியாவது சமரசப் பேச்சை துவக்கி போரை நிறுத்தும் முயற்சியில் தெற்கு வியட்நாம் ஈடுபட்டுள்ளது. இதற்கான நடவடிக்கையாக ஜெனரல் டுவாங் வான் மின் தெற்கு வியட்நாமின் புதிய ஜனாதிபதியாக பதவி ஏற்கிறார்.

கடந்த சில தினங்களுக்குள்ளாக தெற்கு வியட்நாமில் 3 ஜனாதிபதிகள் மாறியுள்ளனர். ஜனாதிபதி தியு முதலில் விலகினார். அவருக்குப் பதில் டிரான்வான் ஹுவாங் ஜனாதிபதியானார். இப்போது அவரும் விலகி ஜெனரல் டுவாங் வான மின் ஜனாதிபதியாகிறார்.

## இன்றைய சினிமா

சென்னை

| | |
|---|---|
| ராம் | கஸ்தூரி விஜயம் |
| நியூ எல்பின்ஸ்டன் | விஷ்ணு விஜயம் |
| நேஷனல் | பாவமன்னிப்பு |
| சராஸ் | அவளும் பெண்தானே |
| **பல்லாவரம்** | |
| லக்ஷ்மி | —கஸ்தூரி விஜயம் |
| **தாம்பரம்** | |
| நேஷனல்— | குப்தஞான் |
| எம். ஆர். தியேட்டர் | தாய்ப்பாசம் |
| ஸ்ரீ சித்ரா | தேன் சிந்துதே வானம் |
| **வில்லிவாக்கம்** | |
| ராயல் | பட்டாம்பூச்சி |
| **தூரோம்பேட்டை** | |
| வெற்றி | அவன்தான் மனிதன் |
| **கொளத்தூர்** | |
| ஸ்ரீ குமரன் | அவள் ஒரு தொடர் கதை |

## குசேலர் தலைமையில் மேதின விழா

சென்னை, ஏப். 28—இந்த ஆண்டு மே தினத்தை குசேலர் தலைமையில் உள்ள உழைக்கும் மக்கள் மாமன்றத்தினர் கோலாகலமாகக் கொண்டாட ஏற்பாடு செய்து வருகிறார்கள்.

மே முதல்நாள் அன்றுமாலை மூர்மார்க்கெட் அருகேஇருந்து ஊர்வலம் புறப்படுகிறது.

வாணவேடிக்கை, தாரை தப்பட்டை, சிலம்பு ஆட்டம், மயிலாட்டம், ஒயிலாட்டங்களுடன் மே தின ஊர்வலத்தை நடத்த திட்டமிட்டு இருக்கிறார்கள்.

இந்த ஊர்வலத்தில் பல்லாயிரக் கணக்கான தொழிலாளர்கள் கலந்து கொள்வார்கள் என்று அறிவித்திருக்கிறார்கள்.

ஊர்வல இறுதியில் கடற்கரையில் நடக்கும் பொதுக் கூட்டத்தில் குசேலர், வி. பி. சிந்தன், ரங்கராஜன், ஜி ராஜகோபால் ஆகியோர்பேசுகிறார்கள். முன்னாள் மேயர் கிருஷ்ணமூர்த்தி இந்தக் கூட்டத்திற்கு தலைமை தாங்குகிறார்.

4-ம் பத்தி தொடர்ச்சி

ரூ. 105 என்று விலை நிர்ணயிக்கப்பட்டிருப்பதை உயர்த்த வேண்டும் என்று மாவட்டத் தலைநகர்களில் தர்ணாவும் ஆர்ப்பாட்டங்களும் நடத்தப்படும் என்று ஜெயப்பிரகாஷ் தெரிவித்தார்.

# தமிழக சட்டசபை இரண்டுவாரத்தில் மீண்டும் கூடலாம்

சென்னை, ஏப். 28—தமிழக சட்டசபை இன்னும் இரண்டு வாரங்களில் கூடலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது,

சிக்கிமை இந்தியாவில் 22வது மாநிலமாக இணைக்கும் மசோதாவுக்கு அங்கீகாரம் வழங்க தமிழக சட்டசபை கூட்டப்படலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இந்தமசோதாபாராளுமன்றத்திலும் ராஜ்ய சபையிலும் நிறைவேற்றப்பட்டு இருக்கிறது.

இது சட்டமாக ஆக 11 மாநில சட்ட மன்றங்கள் அங்கீகாரம் அளிக்கவேண்டும்.

இந்த மசோதாவுக்கு இரண்டு வார காலத்துக்குள் மாநில சட்டசபைகளின் அங்கீகாரத்தைப் பெறும் பொருட்டு மாநில அரசுகளுடன் மத்திய அரசு தொடர்பு கொண்டுள்ளது.

மத்திய மந்திரி சபையின் அரசியல் விவகாரக் கமிட்டி டெல்லியில் கூடி இந்த விஷயம் பற்றிவிவாதித்தது. மசோதாவுக்கு அங்கீகாரம்பெற சட்டசபையின் விசேஷக் கூட்டத்தை நடத்துமாறு சில மாநில அரசுகளை கேட்டுக் கொள்வது என்று கமிட்டி கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது. இதன்படி 2 வார காலத்திற்குள் தமிழக சட்டசபையை கூட்டி மசோதாவுக்கு அங்கீகாரம் தெரிவிக்குமாறு தமிழ்நாடு கேட்டுக் கொள்ளப்படலாம் என்று கருதப்படுகிறது.

## காமன்வெல்த் மாநாடு: இந்திரா பயணம்

பம்பாய், ஏப். 28—ஜமைக்கா காமன் வெல்த் பிரதமர்கள் மாநாட்டில் கலந்து கொள்ள டெல்லியிலிருந்து பிரதமர் இந்திரா புறப்பட்டார். நேற்று பம்பாய் வந்த அவர் இங்கிருந்து இரவு லண்டன் பயணமானார். அவருடன் வெளிவிவகார அமைச்சர் சவானும் செல்கிறார்.

இன்று கிங்ஸ்டன் போய்ச் சேருகின்றார். 29-ம் தேதி மாநாடு துவங்குகின்றது. மே 4-ம் தேதி இவர் புதுடெல்லி திரும்புவார். ஆனால், மாநாடு முடிவடையும் 6-ம் தேதி வரை சவாண் தங்கியிருப்பார்.

அமெரிக்கா வழியாக பிரதமர் ஜமைக்கா செல்லவில்லை,

## இந்தியாவுக்கு மேற்கு ஜெர்மன் கடன் உதவி

புதுடெல்லி, ஏப். 28—1975-76-ம் ஆண்டுக்கு இந்தியாவுக்கு ரூ. 57.46 கோடி உதவியளிக்கும் ஒப்பந்தம் ஒன்று மேற்கு ஜெர்மனியுடன் செய்துகொள்ளப்பட்டிருக்கிறது. இந்த ஒப்பந்தம் புதுடெல்லியில் கையெழுத்தாகியது.

கடந்த ஆண்டைவிட இது ரூ. 5.41 கோடி அதிகமாகும்.

இந்தியா தரவேண்டிய கடனுக்கு நிவாரணம் அளிக்க இந்தக் கடன் உதவி வழங்கப்படுகிறது.

## இந்தியா வாங்கிய 6 கப்பல்கள்

புதுடெல்லி, ஏப். 28—இவ்வாண்டு மார்ச் மாதத்தில் 6 கப்பல்கள் வாங்கப்பட்டன. த்துடன் நாட்டில் மொத்தம் 302 கப்பல்கள் உள்ளன. வாங்கப்பட்ட ஆறு கப்பல்களில் மூன்று கப்பல்கள் அரசுத் துறையில் வாங்கப்பட்டதாகும். மீதி மூன்றும் தனியார் கம்பெனிகளால் வாங்கப்பட்டன.

## தேர்தல் நடத்தாவிடில் கிளர்ச்சி: புதுவை சுப்பையா அறிவிப்பு

பாண்டிச்சேரி, ஏப். 28—புதுவை மாநிலத்தில் உடனே தேர்தலை நடத்தாவிட்டால் கம்யூனிஸ்ட் கட்சி கிளர்ச்சி நடத்த நேரிடும் என்று புதுவை மாநில கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் வி. சுப்பையா அறிவித்து உள்ளார்.

சுப்பையா வெளியிட்டுள்ள அறிக்கை ஒன்றில் இதுபற்றி கூறியிருப்பதாவது:

புதுவை மாநிலத்தில் தேர்தலை நடத்த வாக்காளர்பட்டியல் தயாராக இருக்கிறது. தொகுதி நிர்ணய முடிவுகளும் தயாராக இருக்கிறது.

ஆனால் இங்கிருக்கும் கவர்னர் சேத்திலால் மத்திய அரசுக்கு தேர்தலை நடத்த சிபாரிசு செய்யாமல் இருக்கிறார்.

ஓராண்டு காலமாக தேர்தலை நடத்தவேண்டும் என்று இங்குள்ள அரசியல் கட்சிகள் வற்புறுத்தி வருகின்றன.

ஆகவே இனியும் காலம் தாழ்த்தாமல் புதுவையில் தேர்தலை நடத்த மத்திய அரசு முன்வரவேண்டும். இல்லாவிட்டால் கம்யூனிஸ்டு கட்சி இதற்காக இங்கே மக்கள் கிளர்ச்சியை நடத்தும் என்று சுப்பையா அறிவித்துள்ளார்.

## 95 ஆயிரம் டன் முந்திரி இறக்குமதி

புதுடெல்லி, ஏப். 28—தன்ஜானியா, மொஜாம்பிக்குடன் 95 ஆயிரம் டன் முந்திரிக்கொட்டைகள் வாங்குவதற்கான ஒப்பந்தம் ஒன்றை இந்திய முந்திரிக் கார்ப்பொரேஷன் பூர்த்திசெய்துள்ளது. அண்மையில் புது டெல்லியில் முந்திரி உற்பத்தி செய்யும் மாநிலங்களின் பிரதிநிதிகள் கூட்டம் ஒன்றில் வர்த்தகத்துணையமைச்சர்விஸ்வநாத் பிரதாப் சிங் பேசுகையில் இதுவரை முந்திரி அபிவித்திக் கார்ப்பொரேஷன் ஏற்படுத்தாத மாநிலங்கள் உடனடியாக அவற்றை ஏற்படுத்த வேண்டும் என்று கூறினார்.

அரிசி தேவை

## புதுவை அரசு கோரிக்கை: டெல்லி நிராகரிப்பு

புதுச்சேரி, ஏப். 28—உணவுக் கஷ்ட நிலைமையை சமாளிக்க உடனடியாக அரிசி சப்ளை செய்யும்படி புதுவை அரசு கோரியதை மத்திய அரசு ஏற்கவில்லை. மக்கள் கோதுமையை அதிகமாக உபயோகித்து அரசுடன் ஒத்துழைக்கும்படி கவர்னர் சேத்திலால் கேட்டுக்கொண்டார்.

## கொள்ளை வழக்கில் லட்சாதிபதி மகன் கைது

ஹால்துவானி ஏப். 28—ஒரு கொள்ளை சம்பந்தமாக லட்சாதிபதியின் மகன் உட்பட 3 பேரை போலீசார் கைது செய்துள்ளனர்.

அவர்களும் மற்றும் பலரும் சேர்ந்து டெல்லியிலிருந்து நைனிடாலுக்கு சென்று கொண்டிருந்த சுற்றுலாப் பயணிகளை கொள்ளையடித்ததாகக் கூறப்படுகிறது.

போலீசார் மேலும் 3 பேரைத் தேடிவருகின்றனர். அவர்களும் இந்நகரை சேர்ந்த மற்றொரு லட்சாதிபதியின் பிள்ளைகள் என்று கூறப்படுகிறது.

Printed by S.V.G. Sowrirajulu at the M.C.P.P.S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.